*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 4, itaḻ 45*

*July 29, 1924*

Record no. 148

உ

சிவமயம்

சென்னைப் பதிவு எண் கரு௦௩.

தந்தி விலாசம்:—[illegible]

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்று
செவ்வாய்க்கிழமை தோறும் வெளி வருவது.

ஆசிரியன் :—ராய. சொக்கலிங்கன்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

[illegible]யும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௪. காரைக்குடி ரக்தாக்ஷி௵ ஆடி-மீ ௧௪-உ (௨௯—எ—௧௯௨௪) இதழ் [illegible]

"அன்னவயற் புதுவை
யாண்டா ளரங்கற்குப்
பன்னுதிருப் பாவைப்
பல்பதிகம்—இன்னிசை
பாடிக் கொடுத்தாணற்
பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச்
சொல்லு"

"சூடிக் கொடுத்த
சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல
பல்வளையாய்—நாடிநீ
வேங்கட வற்கென்னை
விதியென்ற விம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே
நல்கு."

## சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாள்.

முன்பு திரேதாயுகத்தில் மிதிலா நகரில் ஜனகமஹாராஜற்கு உழுபடைச் சாலிலே ஸ்ரீதேவியின் அம்சையாக ஒருமகள் தோன்றிச் சீதை யென்னும் திருப் பெயருடன் வளர்ந்து, ஸ்ரீமந் நாராயண பகவானது விபவாவதாரமூர்த்தியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீராமபிரானுக்கு வாழ்க்கைப்பட்டு உகந்ததுபோல, இக் கலியுகத்திலும், கலி ௯௮வது ஆண்டான நள வருஷத்து ஆடி மீ சுக்ல பக்ஷ சதுர்த்தசி திதியில் பூர நக்ஷத்திரத்தில் பூதேவியின் அம்சையாக ஸ்ரீவில்லிபுத்தூர் பெரியாழ்வா ரென்னும் பரமவிஷ்ணுபக்தற்குத் திருத்துழாய்ப் பாத்தியில், ஒரு மகள் தோன்றிக் கோதை யென்னும் திருநாமம் வாய்க்கப்பெற்று வளர்ந்துவந்து ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் அர்ச்சாவதாரமூர்த்தியாகிய ஸ்ரீரங்கநாதனை மணந்து உகந்தனள். அங்ஙனம் சூடிக் கொடுத்த நாச்சியாரென்னும் பெயராலும் அழைக்கப்படுகின்றாள்; ஆண்டாள் என்னும் பெயரும் அம் மங்கையர்க்கரசியைச் சிறப்பித்து நிற்கின்றது. அவ் வம்மையைப்பற்றித் தான், சூடிக்கொடுத்த சுடர்க் கொடி என்னுமித் தலைப்பின்கீழ் இன்று நாம் எழுதப்புகுந்தோம்.

ஸ்ரீவில்லிபுத்தூரிலே பெரியாழ்வாரென்னும் அப்பெரியார், தாம்திருத்துழாய்ப் (துளசிப்) பாத்தி யமைத்தற் பொருட்டுத்திருநந்தவனத்தைக் கொத்திவருகையில், அங்கிலத்தில், ஒரு பெண்மகவு அகப்பட, அதனைத் தமது மகளாகப் பாவித்துக் கோதையென்னும் நாமஞ்சூட்டி, வறியனொருவன் பெற்ற பெருநிதியனைய பாதுகாத்துப் பாராட்டிச் சீராட்டித் தாலாட்டிப் பாலூட்டிப் பாலித்து வயதளவிற் பரமஞானமும் வரும்படியாகப் போதித்து வந்தனர்.

இளமைதொடங்கியே எம்பெருமான் பக்கல் பக்திப் பெருவேட்கைகொண்டு, அத்துறைக்காம் பெருங் கைங்கரியங்களையே நாளுஞ்சிந்தித்து, வேறொரு மானிடத்தை மணக்கக் கருதாது விண்ணவர் பெருமானொருவனையே மணக்க மனங்கொண்டு அப்பிரானது மகிமைகளையே எப்போதும் சிந்தித்தல் தெளிதல் அதித்தலாதிய செய்து கொண்டிருக்கும் அச்சுரிகுழற் கோதை நாய்ச்சியார், நாள் தோறும் தமது தகப்பனார் வடபெருங் கோவிலுடையானுக்குச் சாத்துதற்காகக் கட்டி வைத்திருக்கும் திருமாலையைத் தந்தையில்லாத சமயம்பார்த்து எடுத்துத் தம் குழலிலே தரித்துக்கொண்டு, "அப்பெருமானுக்குநான் நேரொத்திருக்கின்றேனோ?" என்று சிறந்த ஆடையாபரணங்களையணிந்து அவ்வொப்பனை யழகைக் கண்ணாடியிலே கண்டு மகிழ்ந்து, தந்தைவருதற்குமுன் அம்மலர் மாலைகளைக்களைந்து முன்போலவே, செண்டாகச்சுற்றி வைத்துவிடும் வழக்கமுடையாராக இருந்தனர்.

இங்ஙனம் பல நாட்கள் கழிந்தன. இவ் வம்மையார்பால் விருப்பும் இவர் செயலில் உகப்பும் கொண்டுள்ள எம்பெருமான், இவ்விரஹஸ்யச் செயலைப் [illegible] பற்றி[illegible] போது[illegible] சென்ற [illegible] லாத வழக்கமாய் வெகு விரைவில் மீண்டுவந்துவிட்டனர். அவ்வமயம் நம் கோதை நாயகியார் அத்தொடையலைச் சூடியணிந்து ஓர்வாலவ்வா பூங்கொடியாக நின்று பார்த்திருந்தனள்.

ஆழ்வார் இது அபசாரமாயிற்றே என்று சினந்து, தமது நங்கைக்கு நன்மதி கூறிவிட்டு, அன்று வடபத்திரசாயிக்கு மாலை சாத்தாமல், அன்றையத் திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்தமைக்கு வருந்தி மிகுந்தனர்.

அன்றிரவில் வடபெருங்கோயிலுடையானுருவில் எம்பெருமான் ஆழ்வாரது கனவில் தோன்றி, "இன்று நமக்கு மாலை கொண்டுவராதிருந்தது என்? நங்கைசூடிக் கொடுத்த மாலையேஎன்னை நறுமணம் மிக்கது; அதனையே நாம் மிகக் களிப்புடன் ஏற்போம்; ஆகலின், இனி அந்நங்கை தொடையலையே எமக்குக்கொண்டுவந்து சாத்தக்கடவீர்" எனத் திருவாய் மலர்ந்து சென்றனர்.

கண்விழித்த விஷ்ணு சித்தராகிய ஆழ்வார், அம்மங்கையின் தோற்றத்தையும் ஏற்றத்தையும் இனிதாராய்ந்து மலர் மங்கையென்றே எண்ணி, அவள் திறத்தில் அன்புமீக்கொண்டு, அனைத்துலகிற்கும் அன்னையாய் அவற்றையாண்டாளாகுஞ் சீர்மையினைத்தழுவி ஆண்டாள் என்னும் திருநாமத்தாலும், மாதவனுக்கு உரியமலர் மாலைச் சூடிக்கொடுத்த அவ்வனுகப்பித்தமை காரணமாகச்சூடிக்கொடுத்தநாச்சியார் என்னும் திருநாமத்தாலும் அழைத்துப் பக்திபரவசராய் இருந்தார்.

அந்நாச்சியாரும் தமது பருவம் வளருந்தோறும் ஞானமும் பரமன்பால் பக்தியும் உடன் வளரப்பெற்று, தமக்கேற்ற காதலனுகத் தாம் கருதிய கடல் வண்ணன் விஷயமான வேட்கையும் மிகவளர்ந்து, கண்ணனது பிரிவை யாற்றுத கோபஸ்திரீகள் போலத் தாமும் நோன்புநோற்று, அவ்வபிப்பிராயத்தைப் பாசுரமிட்டுப் பாடியருளினர் அவைதாம் திருப்பாவையென்னும் பெயராலும், நாச்சியார் திருமொழி யென்னும் பெயராலும் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தின் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. அவை இரண்டும், முன்னது கூ0 பாசுரங்களும் பின்னது கசங பாசுரங்களுமாக எண்ணிக்கை கொண்டிருக்கின்றன.

மங்கைக்கு விவாஹப்பருவம் வந்தவெல்லையில் தந்தையாராகிய ஆழ்வார் ஒன்றும் செய்யவும் நினைக்கவும் தோற்றுதவராகி, அந்நங்கையை யணுகி, "நீ யார்க்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய்?" என்று வினவினர். நாச்சியார், "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் நூற்றெட்டுத் திருப்பதி யெம்பெருமான்களின் பேரும் சீரும் உருவும் திருவும் உகந்துரைப்பீராயின், என் கணவரை யான் குறிக்கின்றேன்" என்றநல்லுரை நவின்றனன்.

ஆழ்வாரும் அவ்வாறே எடுத்துச் சொல்லி வரும்போது, வடமதுரைக் கண்ணன்பெயரைக் கேட்டு மயிர்ச்சிலிர்ப்பும்; திருமலை வேங்கடவர் பெயரைக் கேட்டு முகமலர்ச்சியும் திருமாலிருஞ்சோலை மலையழக நம்பியின் பெயரைக்கேட்டு உள மகிழ்ச்சியும் காட்டியும் திருவரங்கம் பெரியகோயில் ஸ்ரீரங்கநாதனது மகிமை கேட்டவளவில், அளவற்ற ஆனந்தமடைந்தும் நிற்க, ஸ்ரீரங்கநாதனே இவளது மணமகனுகுமென்று ஆழ்வாரும் சிந்தித்து, "நம் பெருமாள் இவளைக் கடிமணம் புரிதல் யாங்ஙனம் கைகூடும்?" என்று சிந்தாக்கிராந்தராக இருந்தனர்.

அப்போது திருவரங்கச் செல்வன், ஆழ்வாரது கனவில் எழுந்தருளிச் சேவைசாதித்து, "உமது திருமகளை எமது திருக்கோயிலேற அழைத்து வாரும்; யாம் அங்கீகரித்துக் கொள்ளுகின்றோம்" எனத் திருவாய்மலர்ந்து சென்றனர்; அன்றியும், அப்பெருமான், அப்பெருங்கோயிற் பரிசாரகர் கனவிலும் தோன்றி, "ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, நமது சத்திர சாமராதிகளோடும், சகல மங்களவாத்தியங்களோடும், நவரத்தினப் பல்லக்குடனுஞ் சென்று, "ஆண்டாளை யழைத்து வாருங்கள்" என்று சாதித்தருளினர்.

அவ்வாறே, திருவரங்கம் பெரியகோயிற் பரிகரத்தாரும், ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து சேர்ந்தனர்; ஆழ்வாருக்கும் அறிக்கையை அறிவித்தனர்; ஆழ்வாரும், ஆனந்த பரிதராக, வடபெருங்கோயிலுடையான் ஸந்நிதி சென்று, திருவரங்கம் அழகிய மணவாளனது நியமனத்தை விண்ணப்பித்து அவரனுமதி பெற்றுப்பிரயாணமாயினர்.

இவ்வதிசயச் செய்தியை யாதியோடந்தம் செவியுற்ற, ஸ்ரீவல்லப தேவராயனும், அவ்விவாஹ மஹோத்ஸவத்தைத் தானும் உடனிருந்து நடத்த எண்ணங்கொண்டு, ஸகல மங்கள ஸ்ரீதனப் பொருள்களுடனும் ஆடம்பரங்களுடனும் ஸ்ரீரங்கம் சென்று சேர்ந்தான். பட்டர்பிரானுகிய பெரியாழ்வார், ஆண்டாளை மணச் சிவிகையில் எழுந்தருளப்பண்ணி, மங்களவாத்திய கோஷத்துடனே, "ஆண்டாள் வந்தாள்; சூடிக்கொடுத்த சுடர்க்கொடி வந்தாள்; சுரும்பார்குழற் கோதைவந்தாள்; திருப்பாவை பாடியருளிய செல்வி வந்தாள்; பட்டர்பிரான் புதல்விவந்தாள்; வேயர்குல விளக்கு வந்தாள்" என்று பல சின்னங்கள் டரிமாற, மெய்காப்பாளர் உடன் சூழ்ந்து நிற்க, திருவரங்கம்பெரியகோயிலையடைந்து, பெரிய பெருமாளுடைய முன் மண்டபத்திலே பிராட்டியை நிறுத்திச் சேவிக்கப்பண்ணினர்.

அத்திருமாலின் அழகானது, இரும்பைக் காந்தமிழுக்கின்றவாறு, ஆண்டாளைக் கவர்ந்ததனுல், சூடிக்கொடுத்த நங்கை மென்சிலம்பார்க்கச் சீரார் வளையொலிப்பக் கொடி யேரிடையாட அன்ன நடைகொண்டு, அரங்கனருகிற் சென்று, ஆனந்தக்கடலி லாழ்ந்து, திருவரங்கன் திருவடி வருடக்கருதிச் சேஷசயனத்தின் மீதேறி நம்பெருமாளது திவ்ய ஜோதியுடன் கலந்து கொண்டனள். கண்ட ஆழ்வாரும் அரசனும் சீடரும் மற்றவரும், ஆனந்தமடைந்து, திருக்கல்யாணத் திருவிழாக்கொண்டாடி, பிரசாதமும் அநுமதியும் பெற்றுத் தத்தம் வாழ்பதி சென்றனர்.

வாழி.

திருவாடிப் பூரத்துச்
 செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதுஞ்
 செப்பினுள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த
 பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப்
 பின்னுனுள் வாழியே

ஒருநூற்று நாற்பத்து
 மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கற் கேகண்ணி
 உகந்தளித்தாள் வாழியே
மருவாரும் திருமல்லி
 வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை
 மலர்ப்பதங்கள் வாழியே"

இந்த அம்மையாரின் திருநக்ஷத்திரம் நிகழும் ஆடிமாதம் ககூ-உயாகிய சுக்ல பக்ஷத் திருதியை பூரநக்ஷத்திரம் கூடிய ஞாயிறன்று வருகின்றது. ஆழ்வார்களுள் பெண்ணாய்ப் பிறந்து பேரெய்திப் பேறடைந்த பெருந் தேவியாரிவர்.

---

## சமூகநிலையும் பெண்விலையேற்றமும்.

---

அன்பிற்கெழுமிய வாலிபசகோதரர்களே?

நம் சமூகத்தில் பெண்விலை யேறி விட்டது. எக்காரணமென அன்பர்கள் வினவக்கூடும்.

மலாய்நாட்டில் ரப்பர்விலைப் பருவம் எங்ஙனம் ஏற்றமும் இறக்கமுமாய் இருக்கிறதோ அதுபோல பெண்விலை தற்காலம் ஏற்றம் என்னும் படியில் ஏறிக்கொண்டு கண்ணுக்குத் தலைதெரியாமல் தடுமாற்றம் அடைந்துகொண்டு இருக்கிறது சமூகத்தில். வாலிபர்கள் மிகுதி பெண்கள் சுருக்கத்தால் விலையேறிற்றோ? அல்ல அல்ல. சுo-வயது அo-வயது சென்ற வாலிபக் கிழவர்கள் நாம் இறந்துவிட்டால் நமக்கு ஒப்பாரி வைத்து ஓலமிட்டழுக பெண்சாதி இல்லாதிருந்தால் ஊர்ப்பெண்கள் எல்லாம் கேலிசெய்து நகைப்பார்களாம். அதற்கு ௰oooo ரூபாயைக் கொட்டிக்கொடுத்து ஓர் அருமையான பெண்ணை இரண்டாந்தாரம் மூன்றும் தாரமாக திருமணம் நிகழ்த்துகிறார்கள். தாத்தா திருமணம் நடாத்திய இரண்டாண்டில் சிவலோகம் எய்தினுல் பெண்ணின் கதியென்ன? நாய் நரியைப்போல் விழித்துக்கொண்டிருக்க வேண்டியது தான். சாகப்போகும் கிழவர்கள் கட்டழகுவாய்ந்த கன்னிகைகளை திருமணம்நடாத்த எழும்பிய பிறகுதான் பெண்ணின்விலை யேறிற்று என்பது திண்ணம்.

அன்புவாய்ந்த வாலிபர்களே!

எழுங்கள்! எழுங்கள்!! இன்றே எழுங்கள்!!! நம்தனவைசிய ஊழியர்சங்கத்தார் புதிய மணம் வேளாளர் மாபினில் நடாத்துகிறார்கள். பிரதிதினம் ௰௫-வாலிபர்கள் வந்தாலும் சங்கத்தார் மணம் நடாத்தக் காத்திருக்கிறார்கள். வாலிபர்களே! மாலை கோவிலிலிருந்து வரவில்லை யென்று சிறிதும் யோசிக்க வேண்டாம். நம் கோவில்களில் தற்பொழுது மாலை, பட்டிப்புஷ்பம் இன்னும் மற்ற குழைகளால் தயார் செய்து கொண்டுவருகிறார்கள். அஃதாவது கல்யாண காலத்தில் இதில் நமக்கு வரும் பெருமை என்னே? உயரியசங்கமணத்திற்குமாலை வேண்டுமானுல் மல்லிகை முல்லை புஷ்பங்களைக்கொண்டு வந்து ஆரம்சூடிப் (மரகத விநாயகப் பெருமானுக்கு சூட்டிப்) பிறகு எடுத்து வந்து மணமகனுக்கும் மணமகளுக்கும் சூட்டினுல் இன்புற்று வாழலாம் என்பதில் ஐயமில்லை. அப்பால் பெண்விலையேற்றம் தானேதணிந்து சமூகம் தழைத்தோங்கும். திருமணம்என்ற நறுமணத்திற்கு, வாலிபர்களே! சிறிதும்தாமஸமில்லாது, வாருங்கள்! வாருங்கள்!! வந்து இன்புற்றுய்யுங்கள்!!!

சே. சொக்கலிங்கம்செட்டியார்.
செவ்வூர்.



## தனவைசியச் சகோரிகளுக்கு ஓர் வேண்டுகோள்.

---

எனது அன்பார்ந்த செல்வச் சகோதரிகளே! ஆழ்ந்த நித்திரையிலிருக்கும் உங்களுக்குச் சில வார்த்தைகள் சொல்லவந்து தொந்தரவு கொடுப்பதற்காக மன்னிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

அடியேன்கூறப்போகும் எனது சிற்றறிவிற் கெட்டிய அபிப்பிராயத்தை நமது தனவைசியஊழியர் சங்கத்துச் செல்வச் சகோதரர்கள் முன்னமே பன்முறைபிரசங்கவாயிலாகவும் பத்திரிகை மூலமாகவும் தெரிவித்துள்ளார்கள். ஆயினும், அவைகளெல்லாம் செவிடன்காதில் சங்கூதியதற் கொப்பாயினவேயன்றி, உங்களுக்கு இதுவரையில் விழிப்பை யேற்படுத்தி யிருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் உங்கள் நித்திரை இன்னும் கொஞ்ச காலத்திற்கு நீடித்திருக்குமேயாகில், நமது சமூகமே மறைந்துவிடுமோ என்ற கவலையினுல் பீடிக்கப்பட்டு எளியேன் இக்கட்டுரையை வரையலானேன். ஆகையால்எனது அன்பார்ந்தசகோதரிகள் பரிபூர்ண கிருபை கூர்ந்து இவ் வேண்டுகோளைப் பார்வையிடுவதோடு மௌனமாக இருந்துவிடாமல் கூடிய சீக்கிரம் அனுஷ்டானத்திலும் கொண்டுவரத் தீர்மானிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

சகோதரிகளே! தற்காலம் சீர்கேடுற்றிருக்கும் நம் சமூகம் தேசபக்தி தெய்வபக்திசமூகச்சீர்திருத்தம் வீரம் முதலிய வேறெந்த விஷயத்திலும், முன்னேற்றமுற்றுப் பிரகாசிக்க வேண்டுமாகில், உங்களுடைய பூரண ஒத்துழைப்பும் ஊக்கமும்தான் பிரதானமானவை. உங்களது முயற்சியினுல் கோழைகளை தீரர்களாக்கவும், மூடர்களை சாத்வீகி களாக்கவும், மூடர்களை கல்வி நிறைந்த அறிவாளிகளாக்கவும் கூடும். ஆடவர்களைச் சீர்திருத்தும்சகல சக்திகளும் உங்களிடமேயடங்கியிருக்கின்றன. இந்த உண்மையை நீங்கள் இதுவரை உணராதிருப்பது ஆச்சர்யத்திலும் ஆச்சரியமே!

தொண்ணூற்றுறார்க் கூட்டம் தூங்குகின்றது. வாலிபர்சங்கங்கள் வழுவிவிட்டன. தற்போதுஊழியர் சங்கந்தான் உறுதியுடன் நிற்கின்றது. இச்சங்கம் ஆடவர்களுக்குத்தான் உரித்தான தென்பது எமது தோற்றமல்ல. உங்களுக்கும் இச்சங்கத்தில் உரிமையுண்டு. நீங்கள் யாவரும் சங்கத்தில் ஸ்தானம்பெற்றுச் சகல விதத்திலும் சமூகத்தைச் சீர்திருத்த முன்வரவேண்டும். சின்னுட்களுக்குமுன் பூர்மிய மாதுகள் கூடிச்செய்த தீர்மானங்களையும் டி தீர்மானங்களில் பெரும்பான்மையை அதே மஹாநாட்டுப் பந்தலிலேயே நிறைவேற்றிவைத்த தேசபக்தசிகாமணிகளான அம்மங்கையர்களின்மனோ உறுதியையும்பற்றிப் பத்திரிகைகளில்படித்திருப்பீர்கள். அவ்வாறே உங்களுக்கென்று தனிச் சங்கம் ஒன்று நிலைநாட்ட வேண்டுமென்ற அவா இருப்பில், நாம்வாழும் நாடுகளில் எந்நாட்டிலாயினும் ஊழியர் சங்கத்தாருடைய ஒத்துழைப்பின் பேரில் ஒரு சங்கத்தை ஸ்தாபித்துக்கொண்டு சமூக முன்னேற்றத்திற்கு உழைக்க வெளிக் கிளம்புங்கள். உங்கள் நித்திரையை உதறித்தள்ளிவிட்டு மனோ தைரியத்துடன் முன் வாருங்கள். சமூகத்தின் எதிர்கால வாழ்க்கையின் உயர்வு உங்களைத்தான் எதிர்பார்த்திருக்கிறது.

நமது சமூகத்தில் பெண்கள் சொற்பமே என்பது யாவர்களும் நன்கு அறிந்தவிஷயமே. அவ்வாறு அறிந்திருந்தும் மேல்நாட்டு நாகரீகப்போக்கினுல்பீடிக்கப்பட்ட நமது செல்வவந்தர்களும் தங்கள் புத்திரர்களின் வேண்டுகோட்கிணங்கி முதல் மனைவி யிருக்க மறு விவாகம் செய்வதினுலும் பல்லுப்போன படுகிழவர்களுக்கு பால்மணம் மாறாப் பாவைகளை நாற்பதினுயிரம் ஐம்பது ஆயிரத்திற்கு விற்று மணம் முடிப்பதினுலுந்தான் இவ்வித கஷ்டம் ஏற்பட்டது என்பது யாவர்க்கும் நன்கு புலனுகும். ஆகையால் இவ்வித அசம்பாவித மணங்களை நிறுத்த உங்களிற் பலர் வேண்டிய முயற்சி எடுத்துக்கொள்ளும்படி வேண்டுகிறேன்.

ஆகையால் இக் கோலாகலங்களை உத்தேசித்தேஊழியர் சங்கத்தார்கள் நமது வாலிபச் சகோதரர்களுக்கு வேளாளர் குலத்தில் மணம் செய்து கொள்ளலாமென்ற ஓர் அருமையான தீர்மானம் செய்தும், அவ்வாறே சின்னுட்களுக்கு முன் பழநியம்பதியில் திருமணங்களும்நடந்துவந்திருக்கின்றன. அம்முறையைப்பின்பற்றி நடத்த நீங்களும் ஊக்கத்துடன் முன் வருவீர்களாகில், நமது வாலிபச்சகோதரர்களைக் கவலைக்கடலினின்றும் வெளியேற்றி, களிக்கடலில்மூழ்கச் செய்வதுடன், நமது சமூக முன்னேற்றத்திற்கும் அடிகோலியவர்களாவீர்கள். அப்படித் திருமணம் செய்துவந்தபோதிலும், அப் பாவையர்களை நமது சமூக ஆசாரம்படியே பழக்கி நடத்துவதுடனவர்கள் சந்ததிகளுக்கும் யாதொரு வித்தியாசமுமின்றித் திருமணங்கள் நடத்தத் தீர்மானிக்கவேண்டியபொறுப்பும் உங்களுடையதே. இதை நடத்திவைக்க உறுதியும் சமரசபுத்தியும் சீர்திருத்தமும் பெற்று விளங்குவது எந்நாளோ; அந்நாளே நன்னுள்!!

சகோதரிகளே!

நமது சமூகம் தயங்கும் நிலையை உணர்ந்து பெண்ணுக்குப் பணம் பெறும் கொடிய (அசுர) வழக்கத்தை அடியோடு நிறுத்த முயற்சிப்பதுடன் கோழைகளாயிப் சில ஆண் மக்களையும் சீர்திருத்த உடனே எழுங்கள். அன்னைபராம் பராசக்தி உங்களுக்குத்துணை செய்வாள். சுபம்! சுபம்!! சுபம்!!!

சமூகாபிமானி.

---

## கொழும்பு.

---

இவ்வூர்த் தனவைசியர்களின் புதுக் கதிரேசன் கோவிலில் சென்றமீ கஉஉ முதல் மிகவிரிவாக ஆடிவேல் உத்ஸவம் நடைபெற்றது, நாளிது ஆடிமீ கஉ சுவாமி தமதிருக்கைக்குப் புறப்பட்டு வரும்பொழுது கூழிபிறைச் செவ்வடியார் திருக்கூட்டத்து அங்கத்தினர்களாலும் இவ்வூர் இன்னும் பலவூர்களிலிருந்து வந்திருந்த நமது வாலிபர்களாலும் பல இன்னிசைக் கருவிகளோடு தேவாரம் திருவாசகம் திருப்புகழ் முதலியபஜனைகள் இரவுக-உo-மணிமுதல் ச-கo-வரை அன்பு ததும்ப மிக அழகாக நடைபெற்றன.

உற்றதுரைப்போன்.

## கவனிப்பார்களா?

இவ்வூர் ஆடிவேல் உத்ஸவத்திருவிழாவைப்பார்ப்பதற்கு வந்திருந்தவர்களுக்கு நமது தனவைசியர்கள் கடைகளில் வைத்தவிருந்துகளில் அநேகமாக மாமிசவகைகளில் சு, எ-வரை குறையில்லாமல் வைக்கப்பெற்றன. ஜீவகாருண்யம் சிறந்து விளங்கும் இக்காலங்களில் கொழும்பில் நடைபெற்ற இவ்விருந்துகளைக்கவனித்தால்மிகவும்வெறுக்கத்தக்கதாயிருக்கிறது. ஆனுல் அவ்விருந்துகளில்இரண்டொன்று சைவவிருந்துகளாக வைக்கப்பெற்றன. அவர்களைப்போலவேமற்றப்பேர்களும் இனிமேல் நடைபெறும் விருந்துகளில் சுத்தமான சைவவிருந்தை வைப்பரோ? இன்னும் சில நாட்களில் நமது ஸ்ரீ ஷண்முகநாதப்பெருமான் உத்தமபக்தராகிய இடும்பய்யாவிற்கு நடைபெறப் போகிற பூசையில் வாய்பேசாப்பிராணிகளாகிய ஆடு கோழிகளைப் பலியிடாது சுத்தமாகப் பால்பழ அபிஷேக ஆராதனைகளைச் செய்யுமாறு ஷண்முகநாதன் திருவருள் புரிவாராக என்று ஜீவகாருண்யப்பிரியன் எழுதுகிறார்.

## வைசிய நாட்டுச் செய்தி

—

**புதுவயல்.**

ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் இரண்டாவதாண்டு நிறைவுவிழா நிகழும் ரக்தாக்ஷி ஞு ஆடி மீ ககவ (உகூ-எ-உசு) சனிக்கிழமை மாலை ௬-மணிக்கு மேல் எ. பெரி. பங்களாவில் கண்டனூர் திருவாளர் தெ. அரு. சித. இராமநாதச்செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றதாகத் தெரிகிறது.

*  *  *

கூழிபிறைச்
**சிவனடியார் திருக்கூட்டம்.**

இவ்வூர்க் கருகாமையிலுள்ள பாலகிரிச் சேத்திரமென்னும் வையாபுரியில் நாளிது மாதம் கouஉ கார்த்திகையன்று இத் திருக்கூடடத்தில் அங்கத்தினர்கள் ஆங்கு சென்று பல இன்னிசைக்கருவிகளோடு தேவார திருவாசக சிவகுக பஜனைகள்செய்துகொண்டு ஸ்ரீ ஆறுமுகக்கடவுளைத் தெரிசித்து ஆங்கு இருக்கும் அவ்வூர் நகரத்தார் அன்னதானமடத்தில் வந்திருந்த அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னம் அளிக்கப் பெற்றது.

*  *  *

**கோட்டையூர்.**

எந்நாட்டினும் சிறந்த நன்னாடாகிய பாண்டிநாட்டின் கண்ணே சகல ஐசுவரியங்களும் நிறைந்தகோட்டையூர்என்னும் திவ்ய நகரத்தில், ஸ்ரீ காஞ்சிபுரம் உபநிஷத பிரம்மேந்திர மடத்து பரம்பராயாத ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீ சச்சிதானந்தேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் திவ்ய சரணாரவிந்த பிருங்காயமான மானஸ தர்பங்கா, க்வாலியர் பரோடா ப்ரபிருதி மகாராஜ ஸமஸ்தானஸ்மாகத நாஸ்திகாதி துர்மத துரீகரண பூர்வ பரிகலிதாத்வைத ப்ரதிஷ்டாபன ஸமுத்பூதயசோவிலாஸ ஸம்பந்ந ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் யோகாநந்தேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கு நாளிது ரக்தாக்ஷி ஞு ஆடி மீ உ௬உ ஸ்திரவாரம் அனுஷ நக்ஷத்திரமும் நவமி திதியும் கூடிய சுபயோக சுபதினத்தில் ஐந்தாவது வருஷ ஆராதன மஹோத்ஸவம் நடக்கிறபடியால், அன்பர்கள் யாவரும் வந்து தரிசித்துப் பேரானந்தமடையப் பிரார்த்திக்கின்றனம். உபந்யாசங்களும் நடைபெறும் என்று கோட்டையூர் நகரத்தார் தெரிவிக்கிறார்கள்.

*  *  *

**வேந்தன்பட்டி.**

திருவள்ளுவர் வாசகசாலையின், ௪-ம் ஆண்டு எ-வது கூட்டம் நாளிது மீ அ-உ மாலை ௪-மணி முதல் கூவ-மணி வரை திருவாளர் குப. நா. குப்பான் செட்டியார் அக்கிராசனத்தில் நடைபெற்றது. மாணவ மாணவிகள் கடவுள் வணக்கங் கூறியபின், தலைவர் முன்னுரை நிகழ்ந்தது. பின்னர், திருவாளர்களான, நா. சொ. சோமசுந்தரம், ராம. சொர்னம் (மாணவி), மு. சொக்கலிங்கச் செட்டியார், லெ. மங்களம்

## பிறநாட்டுச் செய்தி.

—

இந்தியாவுக்கு சுயராஜ்யம் வழங்கிவிட்டால், இந்தியாவில் கலகங்களும் வகுப்புச் சண்டைகளும் ஏற்படுமென்று சொல்லி இங்கிலாந்தினர் கிளர்ச்சி செய்கின்றார்கள்.

*  *  *

மாஸினி கரிபால்டி என்னும் பேர்பெற்ற தேசாபிமானிகளில் கரிபால்டியின் சந்ததியில் கடைசியாகவந்த ஜனரால் கரிடால்டி தமது எஎ-வது வயதில் ரோமபுரியில் காலஞ்சென்றார்.

*  *  *

பாரஸீகத்தின் தலைநகரான டெகிரனில் சில தினங்கட்கு முன் அமெரிக்க ஸ்தானாதிபதி யொருவரும் வேறொருவரும் அநியாயமாக ஜனங்களாற் கொல்லப்பட்டமை காரணமாக ராணுவச் சட்டம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

*  *  *

இங்கிலாந்தில் ஒரு வைத்திய சாலையில் வேலைசெய்து கொண்டிருக்கும் க0௩-வயதடைந்த பேரி புல்லன் என்னும் சிறுமி, கல்யாண ஆசை மேலிட்டு, அவ் வைத்திய சாலையின் பஞ்சாயத்தாரிடம் மனுச்செய்துகொண்டு, அப் பஞ்சாயத்தாருள் ஒரு யௌவனபுருஷரையே விதிப்படி மணந்துகொண்டனராம்.

*  *  *

சனம் சாஸ்திரியார், தமது தோல்வியை மீண்டும்ஒப்புக்கொள்கிறார்; தொழிற்கட்சி யரசாங்கத்தால் இந்தியாவிற்கு நன்மை யேற்பட்டுவிடா தென்பதைத் தமது வாய்விட்டும் சொல்லுகிறார். இனி யாவது அத் துறையினின்றும் இறங்குவரா? ஏது? அவர்க்குத் தான் சொல்லும் செயலும் வேறு வேறாயிற்றே!

---

(மாணவி), பழ. ப. ப. பழநியப்பசெட்டியார் (காரியதரிசி) இவர்கள் முறையே "இன்சொல், மக்கள் கடமை, அடிகள் வரலாறு, கல்வி, உண்மை" என்ற சொற்பெருக்குகளைச் செய்தனர். தலைவர் தக்கதொரு பின்னுரை தந்தனர்.

**திலகர் பிறந்ததினக் கொண்டாட்டம்:**—௳ தினமாகிய ௳உ மாலை கூவ-மணி முதல், திலகர் பெருமான் படத்தையும், கதர் நூலையும்கொண்டு, மாணவ மாணவிகள் சுதேச கீதம் பாடிவா நகரவலம் வந்தனர் என நா. சோ. சோமசுந்தரம் எழுதுகிறார்.

## காரைக்குடி நகர அமைப்பு.

—

காரைக்குடியைப்பற்றிநகரஅமைப்பு இலாகா அத்யக்ஷர் ஆர். டேன் துரை அவர்கள் அபிப்பிராயம்:—

(காரைக்குடி ஸ்தல ஸ்தாபனத் தலைவர்க்கு அனுப்பப் பெற்ற கடிதத்திற்கு நகல்; தலைவர் உத்திரவின் பேரில் வெளியிடப் பெற்றது.)

செட்டிமார் நகரங்களில் பெரியதாகவுள்ள இக்காரைக்குடி ஆரம்பத்தில் நகர அமைப்பு விஷயம் தெரியாதிருந்ததால், மிகுந்த கஷ்டத்தை அனுபவித்துக் கொண்டு வருகிறது. இது எந்த விதமான ஒழுங்குமுறையுடனும் கட்டப்பெறாத காரணத்தால், மிகவும் சுகாதாரக்குறைவாகவும் சில இடங்களில் மிகவும் நெருக்கமாகவும் இருந்து வருகிறது. அதோடல்லாமல் தெருக்களும் மிக ஒடுக்கமாகவும் வளைந்தும் போக்குவரவுக்குக் கஷ்டம் விளைவிக்கக்கூடியதாகவுமிருக்கின்றன.

நகரமத்தியில் ஓடக் கூடிய வாய்க்கால்கள் பூராவும் மிகவும் ஆபாஸமாக இருக்கின்றன. அதனால் மழைகாலத்தில் அதில் இருக்கும் ஆபாஸங்களையும் கழிவுகளையும் தாகத்திற்கு உபயோகப்படுத்தப்படும் ஜலம் உள்ள தடாகங்களில் கொண்டு வந்து சேர்த்துவிடுகின்றன. ஸௌக்கியத்தை அனுபவித்துக் கொண்டிருக்கக் கூடிய இந்நகரமானது இந்தக் கெட்ட ஜலத்தினாலும் கெட்ட வாய்க்கால்களினாலும் மிகவும் கஷ்டத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறது.

காரைக்குடி, இயந்திர வண்டிகளில் பெருத்ததாகவும் அவைகளினால் அதிகப் போக்குவரவு உடையதாகவுமிருக்கிறது. நகர மத்தியில் செல்லும் போக்குவரவுப் பாதைகள் மிகவும் அபாயத்தை விளைவிக்கக் கூடியவைகளாக இருக்கின்றன. ஒரு வழியைச் சிறிய சீர்திருத்தம் செய்வதற்காக அநேக ஆயிரம் ரூபாய்கள் செலவிடப் பெற்று வருகின்றன. போக்கு வரவு சாதனங்களுக்கு உற்ற ரஸ்தாக்களைச் சரியாகச் சீர்திருத்தம் செய்ய அதிகச் செலவு ஏற்படும். ஒரு பெரிய ரஸ்தா மாத்திரம் இப்பொழுது இருக்கும் குறுகிய மார்க்கத்திலிருந்து விஸ்தரிக்கப் பெற்று வருகிறது. எல்லாத் தெருக்களையும் அகலப்படுத்துவதைக் காட்டிலும் ஒரு தெருவில் சிறிது பணத்தைச் செலவு செய்து அதிக உபயோக



முள்ளதாக ஆக்குவது நலமுள்ளதே. நகரம் பூராவும் அபிவிருத்தியடைவதற்காகவே ஒரு பொது அமைப்பு வைத்துக் கொள்ளவும் புதிய இடங்களில் ரஸ்தாக்கள் போடுவதில் அபிவிருத்தி ஸம்பந்தமான நகர அமைப்புச் சட்டம் கூ-வது பிரிவுப்படி ஸ்தலஸ்தாபனத்திற்கு அபிவிருத்தி செய்வதால் நலனடையும்படியான சொத்துக்காரர்களிடத்தில் அதிகவரியை வசூலித்து அபிவிருத்தி செய்து கொள்ளவும் அனுமதி கொடுத்தல் நலம்.

செக்காலையில்உண்டாகிக்கொண்டிருக்கும் நகரம் பூரணமான ஸ்திதிக்கு வருமுன்னரே கவனிக்கப் பெறுதல் வேண்டும். முக்கியமாக மத்தியில் போகும் பெரிய ரஸ்தாவைக் கவனித்தல் வேண்டும். அது ஊருக்குள் புகும் பொழுதும் ஊரை விட்டு நீங்கும் பொழுதும் இரண்டு அபாயகரமான மூலைகள் பெற்றிருக்கின்றது. அவ்விடங்களில் ஏற்கனவே இரண்டு அபாயங்கள் நிகழ்ந்திருப்பதாகவும் சொல்லப்பெறுகின்றன. இரண்டு மூலைகளும்ஊருக்குவெளியே இருப்பதினால், அதை ஒழுங்கு படுத்துவதில் அதிகப் பணச் செலவாவது கஷ்டமாவது இருப்பதாகத் தெரியவில்லை.

இந்நகரமானது பின்னொரு காலத்தில் முக்கியமான புகைரதம் கூடுமிடம் (ஜங்ஷன்) ஆக ஆகுமென்பது உண்மையாதலால், இந்நகரத்திலுள்ளும் புறமும் உள்ள வெளியிடங்களெல்லாம் நகர அமைப்புச் சட்டத்திற்கு உட்படுதல் வேண்டும். 'புகைரத நிலையம் (ஸ்டேஷன்) தீர்மானிக்கப் பெற்றால், அதற்குச் சமீபமாகவுள்ள இடங்கள் ஊருக்கு வெளியே அமையப் பெறின், நகரத்திற்கு மத்தியிலுள்ள இடங்கள் அதிகக் கவனம் செலுத்தப் பெறல் வேண்டும்.

ஒவ்வொரு பிரமுகர்களும் தனியே குளங்கள் பள்ளிக்கூடங்கள் ரஸ்தாக்கள் முதலிய தர்மங்களைச்செய்துவருதலாலும்சிலபெண்மணிகள் ரஸ்தாக்களில் மரங்களை நட்டுவருவதாலும், சமீபத்தில் கூடப்பெற்ற பொதுக்கூட்டத்தில் இவ்வூர் நகரசபையாக மாற்றப் பெறவேண்டுமென்ன தீர்மானிக்கப்பெற்றிருப்பதாகத் தெரிவதாலும். இந் நகரவாசிகளிடத்து ஒரு உணர்ச்சியிருப்பதாகவும் இந் நகரம் கூடிய விரைவில் அபிவிர்த்தி அடையுமென்றும் நிதர்சனமாகத் தெரிகிறது.

## இந்தியச் செய்தி.

—

பர்மாவிலும் சில விடங்களில் வெள்ளச்சேதம் உண்டாயிருக்கிறது.

*  *  *

தென் கன்னடத்திலும் நேத்ராவதியாற்றிற் பெருவெள்ளம் கரைபுரண்டோடுகிறது.

*  *  *

இலங்கை ரத்னகிரிப் பகுதியில் பெல்மதுல்லாவில் விலையுயர்ந்த ரத்னங்கள் கிடைக்கின்றன.

*  *  *

மகாத்மா, செப்டம்பர் மாதத்தில் தமது சுற்றுப் பிரயாணத்தைத் தொடங்கப் போகிறாராம்.

*  *  *

தென்னாட்டினர், ஓயாமல் ஒழியாமல் நூல் நூற்றுவரல் வேண்டுமென்று, மகாத்மா கட்டளையிடுகிறார்.

*  *  *

தஞ்சை ஜில்லா சுந்தரப்பெருமாள் கோவிற்பக்கத்தில், எல்லா ஆறுகளும் ஒன்று சேர்ந்துவிட்டன.

*  *  *

சென்ற ஜூன்மாதத்துத் தமிழ் நாட்டுக் கதர்ப் பஞ்சாயத்தின் மூலமாய் உ0,000 ரூபாய் மதிப்புள்ள கதர் விலைபாயிருக்கிறது.

*  *  *

பகவதி புரத்தில் (தென் மலையாளம்) உண்டான பூகம்பம் காரணமாக, அநேக தந்திக்கம்பங்களும் கட்டிடங்களும் பூமியில் புதைந்து விட்டனவாம்.

---

இந்த உணர்ச்சி அபிவிருத்தியடைந்து வருவது, நகர அமைப்புக்கு ஒரு சந்தோஷகரமான செயலாகும். ஏனெனில்நகரத்தவர்களினுடைய ஒற்றுமையால் இந்நகர சவுகரியத்திற்கும் சுகாதார சீர்திருத்தங்கட்கும் நகரத்தை அழகுபடுத்தற்கும் வேண்டியசாதனங்களைப் பெற்று அபிவிருத்தி செய்துகொள்ளலாம். நெருக்கமும் விரும்பத்தகாத நிலையும் இப்பொழுது அதிகம் இருந்தபோதினும், இந்நகரம் ஊக்கத்திலேனும் அழகிலேனும் குன்றியிருப்பதாகச் செல்வதற்கில்லை. இது சரியான வழியில் திரும்பி அபிவிர்த்தி செய்யப் பெறுமானால், நலனடையுமென்பதில் ஐயமில்லை.

மதுரையில் [illegible] பண்டிகையைப்போட்டிச் சமயம் [illegible]000 ஆடுகள் வெட்டப்பட்டனவாம், ஜீவகாருண்ய சங்கத்தார் இதனைக் கவனித்தல் கூடாதா?

*  *  *

வட மலையாளத்தில் வெள்ளப் பெருக்கால் ஜனங்கள் [illegible] யிலிருந்து படகிலிருந்தபடியே தேங்காய் பறித்துக்கொள்ளும்படி உயரமாக நீர் ஓடுகின்றது.

*  *  *

காவிரி வெள்ளத்தினால் எங்கும் உடைப்புகள் ஏற்பட்ட காரணம் பற்றி, இருப்புப்பாதைப் போக்குவரவு ஏற்பட இன்னும் ஒருவாரம் ஆகுமென்று தெரிகின்றது.

*  *  *

திருச்சியில் நீர்க்குழைகளில் நீர்வாரர்தபடியால், பொது ஜனங்கள் கண்ட கண்ட அசுத்த நீரையும் குடிக்கத் தலைப்பட்டதால், அங்கு வாந்திபேதிதோன்றி அதி ஜனச்சேதம் செய்துவருகின்றது.

*  *  *

ஆகஸ்டுமாதம் முதல் தேதி முதல் ஒருவாரம் திலகர் பிரான் வாரமாகும்; அவ்வாரத்தைத் தேசாபிமானிகள் தேசிய வாரமாகக்கொண்டு உரிய முறையிற் கொண்டாடுவார்களாக.

*  *  *

கள்ளிக்கோட்டைப் பகுதியில் வெள்ளச் சேதத்தால், இருப்புப் பாதைச் சங்கத்தாருக்கு ஒரு கோடி ரூபாய்வரையில் நஷ்டமேற்பட்டிருக்கிறதாம். பிறபகுதிகளையும் கணக்கிட்டுப்பார்த்தாலோ—?

*  *  *

தென்னாடெங்கும் வெள்ளச் சேதம். காவிரி, பவானி, கல்பாத்தி, வைகை, பெரியாறு முதலிய நதிகளில் யானைகளையும் இழுத்துச் செல்லும் வெள்ளம் ஓடுகின்றது. தென் மலையாளம் பகவதி புரத்தில் பூகம்பம் உண்டாயிருக்கிறது.

*  *  *

காவிரிப்பூம்பட்டினத்தில் திருவெண்காடாகிய பட்டினத்தடிகள் அற்புதத் திருவிழா ரக்தாக்ஷி ஆடி உ0௨-முதல் ௩-க௨-வரையில் நடைபெறும். இவ்வுற்சவ தினங்களில் மகேசுவர பூசையும் நடக்கின்றது என்றும், இவ்வுற்சவங்கள் அமையாப் பெருங்காட்சி என்றும் காரியதரிசி சுப்பிரமணியன் எழுதுகிறார்.

நாளென் செய்யும்! வினை தானென் செய்யும்! எனை நாடிவந்த
கோளென் செய்யும்! கொடுங் கூற்றென் செய்யும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.



தனவைசிய ஊழியன்.
காரைக்குடி. ஆடிமீ உகூ௨

## நகர நிர்மாணம்.

நகர நிர்மாணம் என்பது, நகரங்களை நிர்மித்தல் என்னும் பொருள் தந்து நிற்கின்றது. ஒரு நகரம் அதனது நிர்மாணத்தில் ஒழுங்குபெற அமைக்கப்பெற்றிருந்தால், அந்நகரில் நோய்கள் பல தோன்று என்பது அநுபவவுறுதி. நோய்கள் பரவாவிடில், நகரமாந்தர் நோய் வாய்ப்பட்டு கஷ்டமும் நஷ்டமும் வறுமையும் அடையாரென்பது ஒருதலை யன்றோ?

பிரஜைகளைப் பாலிக்கும்உரிமை படைத்துள்ள அரசாங்கத்தார், நகர நிர்மாணத்தையும் ஒரு துறையாக ஏற்றுக் கொண்டே, பாதுகாத்துவர வேண்டிய கடமையுடையவர்களாயிருக்கின்றனர். பிரஜாபரிபாலனமென்பது, அவர்கட்கு எவ்விதத்திலும் கஷ்டமும் நஷ்டமும் பயமும் தோன்றா வண்ணம் பாலிப்பதாகலின், பிரஜைகட்குக்கஷ்டநஷ்டங்கள்தோன்றற்குரிய காரணங்களுள் நகரச் சீர்கேடும் ஒன்றாகலின், பிரஜாபரிபாலனத்தைக் கைக்கொண்டுள்ளவர்கள், நகரச் சீர்கேட்டைக் குறைத்துப் பிரஜைகட்கு சௌகரியங்களை யுண்டுபண்ணுந் துறையாகிய நகரநிர்மாணத்தையும் ஒருபிரிவாக ஏற்றுக்கொண்டு அதிற் பூரணமான கவனத்தைச் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள். பிரஜைகள்பால் வசூலிக்கப்பெறும் வரிப்பணத்தின் பெரும் பகுதி இத்துறையிற் செலவிடவேண்டுவதே அரசாங்க நீதியாகும்.

நம்முன்னோர் இந்நகரநிர்மாணத் துறையிலும் நகரப்பாதுகாப்புத் துறையிலும் வெகுகவனம் செலுத்திவந்திருக்கின்றார்களென்பதை நமது புராணங்களும் சரித்திரங்களும் வற்புறுத்திக் காட்டிக்கொண்டிருக்கின்றன. இவ் வுண்மையவற்றை யறிந்தோர்க்கு நன்கு புலனாகும். நமது புராணங்களில் கூறப்பெற்றிருக்கும் நகரநிர்மாணத்துறைப்படியே நமது ஒவ்வொரு நகரமும் நிர்மிக்கப் பட்டிருக்குமாயின், நமது நகரங்களில் வாந்திபேதி முதலிய கொள்ளை நோய்கள் பரவிப் பிரஜைகளை வருத்தக் காரணமிருக்காது. புராணங்களிற் கூறியுள்ளாங்கு நிர்மாணம் செய்யப்பெற்ற நகரங்களும் நமது நாட்டில் ஓரிரண்டு தற்போது காணப் பெறுமலில்லை. அவற்றின் அமைப்பையும் அழகையும் அதனால் ஏற்படும் நன்மையையும் பற்றி, இங்கிலாந்திலிருந்து நகர நிர்மாண ஆலோசனைக்காகப் பெரும் பணச் செலவில் நம் நாட்டுக்கு வந்து ஊர் சுற்றிச் சென்ற, ஐரோப்பிய நகர நிர்மாண மேதாவிகளும், தங்கள் உபந்யாஸங்களில் நல்ல நல்லஅபிப்பிராயங்கள் கொடுத்துச் சென்றிருக்கின்றனர் என்பதை நேயர்களும் அறிந்திருக்கலாம். ஆயினும் அவ்வற்புத நகரங்களும் நகரப் பாதுகாப்பின் ஒழுங்குக் குறைவால், கொள்ளை நோய்கள் வாய்ப்பட்டு வருந்துவதைப் பத்திரிகைகள் மூலம் அறியும்போது, நம் மனம் பெரிதும் வருந்துகின்றது. ஆட்சி முறையைச் சொந்தக் கையினின்றும் நழுவவிட்டுத்தவிக்கும் ஒவ்வொரு நாடும் இத்தகைத் துன்பங்கட்கு ஆளாக வேண்டியது அவசியம் போலும்.

நகரங்களை ஒழுங்காகநிர்மாணம் செய்தல் மாத்திரம் போதாது. அதற்கேற்ற நகரப் பாதுகாப்பு முறையும் நன்கு கவனிக்கப்பெறல் வேண்டுவது அவசியமாகும். இல்லாதபோது, கொள்ளை நோய்கள் பரவுவதைக்கண்கூடாகக்காண்கின்றோம். ஐரோப்பிய நகரநிர்மாண மேதாவிகளால், போற்றிப்புகழ்ந்து கூறப்பெற்ற மதுரை ஸ்ரீரங்கம் முதலிய உயர்ந்த அழகான நகரங்களிலும் கொள்ளை நோய்கள் பரவி வருத்துவதாக நாம் கேட்கும் இவ்வொரு செய்தியே, இந்தஉண்மையை நன்கு விளக்கிக் கொண்டிருக்கின்றதன்றோ?

நகர நிர்மாணமென்பது, நகரத்தையமைக்கப் புகும் ஆரம்பத்திலேயே, குளமும் கோயிலும் அமைக்கப்பட வேண்டிய இடங்களும், பெருந்தனமும் நாகரிகமும் படைத்த பெரியார்கள் வசிக்கும் தெருக்களை யமைக்க வேண்டிய இடங்களும், மத்திய தரத்தினர் வசித்தற்குரிய தெருக்கள் அமைக்கவேண்டிய இடங்களும், தொழிலாளிகளும் தொழிற்சாலைகளும் அமைக்கப்பட வேண்டிய தெருக்களும், இழிஜனங்களும் அநாகரிகர்களும்வசிக்கவேண்டியதெருக்கள் அமைக்கப்பட வேண்டிய இடங்களும் இன்னவாறெனநன்கு உணர்ந்து, பெரு நகரம் சிறு நகரங்கட்கேற்றவாறு, அடிகோலிக் கட்ட வாரம்பித்தல் வேண்டுமென்பதைக் காட்டி நிற்கின்றது. இதற்குரியவிதிகள், நமது புராண புருஷர்களாகிய பிருஹஸ்பதி சுக்கிரன் மநு சாணக்கியர் முதலானவர்களாலும் நன்கு கூறப்பட்டிருக்கின்றன.

அந்நூல்களுள், ஆறுள்ள நகரங்களும், அவையின்றி வேறு நீர் நிலைகளுள்ள நகரங்களும், ஆறுகளும் வேறு நீர் நிலைகளும் இரண்டுமுள்ள நகரங்களும், அரண்மனை—கோயில்கள் பொருந்தி யமைக்கப் படவேண்டிய நகரங்களும், அவற்றுள் ஒன்றேயமைக்கப்படவேண்டியநகரங்களும், அவை யிரண்டும் அமைக்கவேண்டாத நகரங்களும் பிறவும் இன்னவாறு நிர்மாணிக்கப் பெறல்வேண்டுமென்னும் விவரங்கள்விளக்கமாகவும் விஸ்தாரமாகவும் சொல்லப் பெற்றிருக்கின்றன. பொது விதிகளைச் சமயம் நேர்ந்துழி எடுத்துப்பேசுவோம்.



நகரப் பாதுகாப் பென்பது, அங்ஙனம் அமைக்கப்பெற்ற நகரங்களில், நகர நிர்மாண ஒழுங்கு எதற்காக ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றதோ அந்நியமம் சிறிதும் கெடா வண்ணம், ஒழுங்காக நடைபெற்று வரவேண்டிய முறையை நன்கு கவனித்து நடத்துதலாகும். நகர நிர்மாணத்தை யேற்படுத்திய—செய்த—செய்யஏவிய அவரே என்றும் இருந்து, அந்நியமம் கெடாத வண்ணம் பாதுகாத்து வருதல் இயலாத காரியமாகலின், பின்வருவோரும், அந்நிர்மாண ஒழுங்குகள் கெடாத வண்ணம் நகரப் பாதுகாப்பு விதியை யநுசரித்துக் கவனித்து நடத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பது வெளிப்படை.

தற்போது நாம் காணும் பல் நகரங்கள், புராண நகரநிர்மாண விதியைய நுசரியாமலே அமைக்கப்பட்டிருத்தலை அறிகிறோம். இவைகளுட் பெரும்பாலன, ஆரம்பத்தில் சிறு குடிசைகள் அடங்கியனவாக இருந்து, பிறகு சிறு கிராமங்களாகி, நிர்ணயிக்க முடியாத பல காரணங்களாற்பெருகி, நகரங்களாகவும் பெரு நகரங்களாகவும்வளர்ந்து வந்திருக்கின்றன வென்பது விசாரித்தறியும் உண்மையாகும். இந் நகரங்களை, நகரப் பாதுகாப்புச் சபையார் திருத்தியமைக்கக் கடமைப் பட்டிருக்கின்றார்கள். அங்ஙனம் திருத்தியமைக்கப்படும் போது, பாதுகாப்புச் சபைத் தலைவர், நகர நிர்மாண விதியையும் நகரப் பாதுகாப்பு விதியையும் நன்கு உணர்ந்து, பொது ஜனங்கட்குப் பெருத்த நஷ்டமும் கஷ்டமும் தோன்றா வண்ணம் விடாமுயற்சி கொண்டு திருத்தியமைத்தல் வேண்டும். இக்காலங்களில், அத்தலைவர்க்குப் பலாது மனஸ்தாபங்களும் கலகங்களும் ஏற்படுவது ஸஹஜந்தான்; என்றாலும், தலைவர் மனோபலமும் ஸத்ய பலமும் விடாமுயற்சியும் கொண்டு, நிலைத்து நின்று உழைத்தால் தமக்குப் புகழும் பொது ஜன நன்மையும் கண்கூடாகக் காணப்பெறுவர் என்பது அநுபவவுறுதியாகும். நகரப்பெருமக்களும், நகரப் புனர் நிர்மாணத்தால் தமக்குச் சிறு பெரு நஷ்டங்கள் ஏற்பட்ட போதிலும் விட்டுக் கொடுத்துப், பொதுஜனநன்மையையும் நகர அழகையும் வியாதியின்மையையும் அசுத்தமின்மையையுமே நோக்கங்களாகக் கொண்டு, பின்னும், அவ்விஷயத்தில் நகரத் தலைவர்க்கு வேண்டிய பிற உதவிகளைப் பணத்தாலும் பலத்தாலும் பிறவற்றாலும் செய்ய முன் வர வேண்டும்.

நமது தனவைசிய நாட்டுக்கு மத்திய நகரமாகவும் பிரதான நகரமாகவும் கவனிக்கப் பட்டுவருவது இக் காரைக்குடி நகரமேயாகுமென்பதை அதன் அமைப்பே யுணர்த்தி நிற்கின்றது. எனினும், இந்நகரம், நாம்மேலேகடையிற்கக் கூறியவாறு, கிராமமாக முன்னர்த் தோன்றி எக் காரணம் கொண்டோ வளர்ந்து நகரமாகப் பலப்பட்டிருக்கின்றது. உறுதோற்றத்தாலும்பிறஏற்றத்தாலும், இன்னும் இது, ஒரு பெரு நகரமாகக் கூடிய வளர்ச்சியைப் பெற்றுவருகின்றதென்பதை யாரும் மறுக்கார். அத்தகைய இந்நகர், பின்னர், நோய் வாய்ப்பட்டு ஜனங்களை வருத்தாவண்ணம் இப்போதே செய்யவேண்டிய கடமை, நகரத் தலைவர்பாலும் நகரப்பெருமக்கள்பாலும்ஏறிக்கிடக்கின்றது. இக்கடமையையுணர்ந்து தாமதிக்காமலும் பின்வாங்காமலும் அப்பெரியார்கள் இந் நகரப் புனர்நிர்மாணத்திற் கண்ணும் கருத்தும் செலுத்தியுழைக்குமாறு பன்முறை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறோம்.

இந்நகர நிர்மாணத்துக்கு ஆக வேண்டிய சில உண்மைகளைப் பற்றிய ஒரு கட்டுரை, "ஊழியன்" இவ்விதழின் ௬-௫ பக்கங்களில், "காரைக்குடிநகர அமைப்பு" என்னும் தலைப்பின் கீழ்ப் பொறிக்கப்பட்டிருக்கக்காணலாம். அதனை யூன்றிப் படிப்பின், நகர அமைப்பின் சில உண்மைகளை நேயர்கள் அறிந்து கொள்ளக் கூடும்.

நகர அமைப்பு இலாகாத் தலைவரொருவர், தமக்கு நேரே எழுதியுள்ள ஒரு கடிதத்தினைப்பொது ஜன நன்மையைக் கருதி, நமது ஊழியனில்வெளியிடற்காக அன்பு கூர்ந்து உதவியருளிய நமது ஸ்தல ஸ்தாபனத் தலைவரவர்கட்கு நமது மனப்பூர்வமான நன்றியைச் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

## இடி முழக்கம்.

### புதுக்கட்சி.

அரசாங்கத்தை ஒரு முகமாக எதிர்த்து நிற்கும் பொருட்டுப் பம்பாய்ச் சட்ட சபையிலுள்ள உத்தியோகப்பற்றில்லாத அங்கத்தினரிற் சிலர், ஒரு புதிய கட்சியை யமைத்துக் கொண்டிருக்கிறார்கள்; வேறுசிலரும் இப்புதிய கட்சியிற் சேருவதாய்ச் சொல்லியிருக்கின்றனர்; ஸ்ரீமான்களான ஜயகர் லால்ஜி நாராயணஜி முதலிய பிரபல அங்கத்தினர் ஏற்கனவே இதிற் சேர்ந்து ஒரு கூட்டமும் நடத்தியிருக்கின்றனர்; என்னுமிச் செய்தியைக் கேட்டு யாம் மகிழ்வடைகிறோம்; எனினும், அகில இந்தியத் தேசிய மகா ஸபையே இதற்கொரு பொது ஸ்தாபனமாக இருப்பதை யிப்பெரியார்கள் மறந்தமைக்கு நாம் வருந்தாமலிருக்க முடியவில்லை.

### அர்த்த மென்ன?

பூனா நகரபரிபாலன சபையார், ஜனத்தலைவர்கட்கு உபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்ததற்கும் திலகர் உருவச் சிலையைச் செய்து வைத்ததற்குமாக அச்சபையின் மீது வழக்குத் தொடர அரசாங்கத்தார் அநுமதி கொடுத்தது ஏன்? என்றும், அதன் சம்பந்தமான ஸாதனங்களை ஆஜர்ப்படுத்த வேண்டுமென்றும் ஒரு அங்கத்தினர் கேட்டதற்கு, அதெல்லாம் அந்தரங்கமெனப் பதிலளிக்கப் பட்டதாம்; இதென்ன அந்தரங்கம்? இப்படிச் சொன்னதன் அர்த்தமென்ன? அனர்த்த அரசாங்கத்தில் அர்த்தம் எங்கே கிடைக்கப்போகின்றதென்று அமைதியுடன் நாம் மது காரியத்தைச் செய்து செல்லவேண்டியது தான் கடமையாகும்.

## தந்திச் செய்தி.

பிநங்கு ஆடி மீ கஙஉ

| | |
|---|---|
| சென்னை உண்டியல்விலை | நூற்று அறுபது. |
| ஈயம் விலை | நூற்று இருபத்திரண்டு. |
| ரப்பர் விலை | ஐம்பத்தெட்டு. |

# ஊர்ளூர்ச் செய்தி.

சென்னை உண்டியல் வட்டம் ௦—கஉ—௦
இரங்கூன் உண்டியல்வட்டம் க—கஉ—௦

காலநிலை.

சூரியதாபம் பொறுக்கக்கூடவில்லை; அதிலும் இரண்டு மூன்று தினங்களாக அடிக்கும் வெயிலின் கொடுமை அளவுக்கு விஞ்சியிருக்கின்றது. இவ் விரண்டு மூன்று நாட்களிலும், மழையை எதிர்பார்த்ததுண்டு; நிஷ்பலன்தான்பயன். ஊருணிகளெல்லாமேவரண்டுகிடக்கின்றன. ஊரில் எங்குபார்த்தாலும் ஜலகஷ்டம் சகிக்கக்கூடாதபடி இருக்கின்றது. சிலர், விராட பர்வம் படித்தால் மழை பெய்யும் என்று எண்ணுகின்றார்கள்; பரம்பரை நம்பிக்கையை யநுசரித்து அதுவும் செய்துபார்க்க வேண்டியதுதான்; சில பிரமுகர்கள் முன்வந்து, தக்க சிரத்தாவான்களைக் கொண்டு வருணஜெபம் செய்து, விராட பர்வத்தையும் ஒரு பொதுவிடத்திற் படிக்கச்செய்து, ஊரின் க்ஷேமத்திற் கண்ணோட்டம் வைப்பார்களாயின், அவர்கட்கும் அவர்கள் குடும்பத்தார்க்கும் ஊருக்கும் பிரஜைகட்கும் பேரும்பாக்கியமும் உண்டாகும். ஊரில் வீணே எத்துணையோ பணம்செலவாகின்றது; இத்துறையிலும் இறங்கி இத்தகைய தர்மத்தையும் செய்யவேண்டுகிறோம்.

கோவிலூர்.

இவ் வூருக்கு அடுத்துள்ள கோவிலூர் எனும்க்ஷேத்திரத்தில் ஆடித் திருவிழா ஆரம்பிக்கப்பெற்று, இன்று ஐந்து நாட்களாகின்றன. கோவில் தேவஸ்தானம், கோவிலூர் மடத்தார் கையிலிருந்து, சிவகங்கை ஸமஸ்தானத்து அதிகார வரம்புக்குள்போய்விட்டதானாலும் உத்ஸவம் மிக விமரிசையாகவே நடத்தப்பெற்று வருகின்றது. உத்ஸவச் செலவிற்காக ரூ உ௦௦௦ எடுத்து வைத்திருக்கிறார்களென்றும், மண்டபப்படி ஒவ்வொன்றுக்கும் ரூ கரு௦ தேவஸ்தானத்தாரிடப் கட்டிவிடவேண்டுமென்று ஏற்பாடுசெய்து அங்ஙனமே சிலமண்டபப்படிகள் நடந்து வருகின்றனவென்றும்சொல்லிக்கொள்ளுகிறார்கள். சில மண்டபப்படிக்காரர்கள் மாத்திரம், இத்தகைய கட்டுப்பாட்டுக்குத் தாவா செய்கிறார்களென்றும் சொல்லப்படுகின்றது. ஒரு ஜமீன்தாரது ஸமஸ்தானத்து அதிகார வரம்புக்குள் நடந்தேறி வரும் திருவிழாவில்சதிர்க்கச்சேரி அவசியம் நடந்தேறும் என்னும் விஷயம் சொல்லத் தேவையில்லை. வழக்கம்போல் ஜனங்களும் போய் திருவிழாவைத் தரிசனம் செய்து வருகின்றார்கள். ஆனால் அவ்வூர் மடத்து அதிகாரிகள் மாத்திரம், தேவஸ்தானம் தங்கள் வசமிருந்து மாறின காரணம்பற்றி ஸத்யாக்கிரஹம் சாதிக்கிறார்களென்று தெரிகின்றது.

அரசாங்க வைத்தியசாலை.

பொது ஜனங்களின் நன்மைக்காக அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப் பெற்றிருக்கும் அரசாங்க வைத்ய சாலையால் சுமார் ஈ ஆண்டுகளாகப் பொது ஜனங்கட்கு நன்மைகள் எதிர்பார்த்தப்படி கிடைக்கவில்லையென்னும் வதந்தியிருந்து கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு அரசாங்கத் துறைத் தலைவர்கள், தாம் வாங்கியுண்ணும் மாத வேதனம், பொது ஜனங்களின் பணம்தான் என்பதை முற்றிலும் மறந்து நடந்து கொள்கின்றார்களென்பதை, அவர்களும் இந்தியர்கள்தாம் என்னும்உணர்ச்சியினால் பகிரங்கப்படுத்தி மிகைபட எழுதுதற்கு மிகவும் நாணுகின்றோம். தன்னாற் கூடியவரையில், தானிரங்கியிருக்கும் துறையில் பொது ஜன நன்மையைச் சிறிதுங் கருதாதவரை நாம் எந்தக் கணக்கில் வைத்துப் பேசக்கூடும்; அதிலும், தக்க வருமானத்துடன் அத் துறையிலிருக்கும் ஒருவர் சிறிதேனும் அத்துறையிற் பொது ஜன நன்மையைக் கருதாதிருத்தல் செய்ந்நன்றி கொன்ற குற்றமேயன்றோ? பன்னிச் சொல்லிப் பயனில்லை. அத்தலைவர்கள் இனியேனும் தாமிந்தியரென்பதையும், பொது ஜனங்கள் இந்தியர்தாமென்பதையும், தாமுண்ணுதற்கு அளிக்கப்பெறும் வேதனம் இந்தியப் பணந்தாமென்பதையும் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். இச் சாலைக்கு இரண்டுமூன்று ஆண்டுகளாகத் தலைவராயிருந்து வந்த ஐயரவர்கள் வேற்றூருக்கு மாற்றப் பெற்றிருக்கிறாரென்றும், வேறொரு பெரியார் அப்பதவிக்கு வந்திருக்கிறாரென்றும் தெரிகின்றது. சுப்பிரமணிய ஐயரவர்கட்குச் செல்லுபசாரமும் வரும் பெரியார்க்கு நல் லுபசாரமும் நம் மனதார அளிக்கின்றோம்.

கிராமஸ்தலஸ்தாபனம்.

ஜூலை உஉ செவ்வாய்க்கிழமை கூடியது. அங்கத்தினரில் மிகச் சிலரே வந்திருந்தனர்.

க. ஜூன் மாதத்துச் செலவுக் கணக்கு அங்கீகரிக்கப் பெற்றது செலவு ரூ. ஈ௦எகூ-கஉ-கூ.

உ. திங்கட்கிழமைச் சந்தைக்கும் தினசரிச் சந்தைப்பேட்டைக்கும் முன் கொடுக்கப் பெற்றவருக்கே கக்ஷஉச, உரு-ம் வருடங்கட்கு அனுமதி கொடுக்கப் பெற்றது.

ஈ. மெ.மெ. வீதியில் காரைக்குடி கம்வாய்க் கால்வாயின் பேரில் கட்டப் பெற்ற பாலத்திற்கு மதிப்பிடப் பெற்ற ரூ. கஉ௦௦-ம் அனுமதிக்கப் பெற்றது.

ச நகர அமைப்புச் சட்டத்தைக் காரைக்குடியில் அமுலுக்குக் கொண்டு வர ஸ்தலஸ்தாபனத்தாருக்கு அதிகாரம் கொடுக்கப் பெற்றது.

ரு. புதிதாக வரவழைக்கப் பெற்றிருக்கும் விளக்குகளை ஏற்றுவதற்கு ரூ. கஎ-௦-௦ சம்பளமுள்ள ஒரு ஆள் நியமித்திருக்கிறது.

கூ. மெ. செ. சொக்கலிங்கம் செட்டியார் வீட்டிற்கு முன்பாக வீதியிடத்தில் கான் கட்டிக் கொள்ள அனுமதி கொடுக்கப் பெற்றது.

எ. கழனிவாசல் ரஸ்தாவிலிருந்துமுத்துப்பட்டணத்திற்கு வரும் பாதையில் அடர்ந்திருக்கும் சப்பாத்திக்கள்ளிகளை அப்புறப்படுத்தும் சம்பந்தமான வேலைகளை ஸ்ரீமாந் சிக. நா. ராம. நாராயணன் செட்டியார் மேல்பார்வையில் விடுவதெனப்பட்டது.

அ. குப்பை கூட்டிகள் இப்பொழுது இருப்பவர் குறைவாகவிருப்பதால், கூட ஆறுஆட்கள் நியமித்துக் கொள்ளவேண்டுமென்ற அறிக்கையின்படி இப்பொழுது இருக்கும் சஈ-ஆட்களோடு ஈ-ஆட்கள்சேர்த்து சகூ-ஆக்கலாம் என்ற தீர்மானம்.

கூ. புதிதாய் வந்த விளக்குகளுக்குத் தேவையான சில முக்கியமான சாமான்கள் வாங்குவதற்கு ரூ. கஎரு—௦—௦ அனுமதிக்கப் பெற்றது.

க௦. கல்லுக்கட்டி ஊருணிக் கால்வாயிடத்தில் ஆக்கிரமிப்பு செய்திருப்பதற்கு முகைதீன் பிச்சைராவுத்தர் காதர் பிச்சைராவுத்தர் இவர்கட்கு ரூ. உ௦-மறுபடியும் அபராதம் விதிக்கலாமெனப் பெற்றது.

க௦. கல்லுக்கட்டி வடகரையிலுள்ள ஸதாபனக் கட்டிடத்திற்குப் பக்கத்திலுள்ள காலிக் கட்டிடத்தை ரூ. ஈஉஇ-க்கு இயந்திரவண்டிக் காரியாலயத்திற்காக ஏலத்தில் விடப்பெற்றிருக்கிறது.



## சுத்த வீரன் எழுதுகிறார்:—

## எமது மளிகைக்கடை.

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

இனி "சாமான் கட்டுதல்" என்று நினைக்கிறீர்களா? அது நமதுபெண்மணிகள் புருடனைத்தங்கள்பீத்தற் பெருமைக்குப் பணஞ் சம்பாதிக்க அடிமைகளாக அனுப்பிவிட்டு, பணங்களை வாரியிறைத்துக் கட்டிய ஏழுகட்டுவீட்டையும் இறுகப் பூட்டிக்கொண்டு பழங் கந்தையிலே சாப்பாட்டுச் சாமான்களை கட்டிமுடிந்து ஓலைப்பெட்டியிலே வைத்து மூக்குத்துவாரம் காதுத்துவாரங்களிலெல்லாம் விளக்கமாற்றுக் குச்சிகளைச் செறுகி, கழுத்தில் நூற்சரடுகளைக் கட்டிக்கொண்டு, "மாப்பிள்ளைக்குப் பிரதிநிதி" கட்டிய தாலியையும் மற்ற ஆபரணங்களையும் கழற்றி வைத்துவிட்டுப் பழைய கிழிந்த சேலைகளைக் கட்டிக் கொண்டு வெள்ளைச்சேலை ஆத்தாமார்களுடன் துணைசேர்ந்து பத்துப் பேர் இருபது பேராக ஸ்தலயாத்திரைக்குப் புறப்பட்டுவிடுவார்கள். எவ்வளவு புத்தி நுட்பத்தோடு புண்ணியஞ் சம்பாதிக்கிறார்கள்; பார்த்தீர்களா? ஐயோ! இவர்கள் புகைவண்டியாலயத்தில் படும்பாடு கொஞ்சமா? பிரயாணச்சீட்டு வாங்குமிடத்தில் படும்பாடுகொஞ்சமா? புகைவண்டி ஏறும்போது படும் பாடுகொஞ்சமா? புகைவண்டி ஏறியவுடன் இருக்க இடமில்லாமல் சுமைதாங்கிக் கற்கள் மாதிரி அப்படியே அசையாமல் நிற்கவேண்டியதாகவும்முடிகிறது; தனவைசிய மகுட தனவைசியர்களின் பத்தினிமார்கள் என்று வீட்டிற் பெருமை பேசி என்ன? யாத்திரைச் சங்கதியைக் கண்ணாரக்கண்ட—தனவைசிய குலத்திலே பிறந்த—ஒவ்வொரு ஆண்மகனும் கண்ணீர் விட்டு அழாமலிரான். இந்த சங்கதியை யார் கவனிக்கிறது? அவரவர்கள்வீட்டிலும் தலைவராக உள்ளோர் மூளைக்குவேலைகொடுங்கள் என்று சொல்வதைத் தவிர வேறே ஒன்றுஞ்சொல்வதற்கில்லை.

இனி, "வேட்டிக் கட்டுதல்." என்று நினைக்கிறீர்களா? அதைப் பற்றி உலகுக்கொரு தலைவராகிய மகாத்மா அவர்கள் கதர்வேட்டி கட்டிக்கொள்ளும்படி சொல்லுகிறார்கள். இன்னும் சுராஜ்யகட்சியாரும் அப்படியேசொல்லுகிறார்கள். பெரிய பெரிய பிரபுக்களெல்லாம் அப்படியே செய்கையிற் காட்டுகிறார்கள். பெரியபெரியபிரசாரமெல்லாம்நடக்கிறது.எங்குபார்த்தாலும் 'கதர்' பணம் கமழ்கிறது. நமது சமூகத்திலே வாலிபர்கள் மிகவும் கம்பீரத்தோடு கதர் உடை அணிகிறார்கள். விருத்தர்கள் கூட அப்படியே செய்கிறார்கள். சிலர் இடுப்பிலே பரதேச வேட்டிகளைக் கட்டினாலும் மேல்வேட்டி என்ற சமாசாரத்தில் கதருடையிலே காணப்படுகிறார்கள். நமது பெண்மணிகளும் கதர்ச் சேலையை மிகவும் மகிழ்வாக ஏற்றுக்கொள்ளுகிறார்கள். என்றாலும், "அடுத்த வீட்டுக்காரி வைத்த குளம்பு" நல்லாயிருக்கிறது" என்ற மாதிரி சில டாம்பீகப் பேர்வழிகளுக்குக் கதர் பிடிக்க வில்லையாம். கண்ணுக்கு நல்லாயில்லையாம். கரடுமுரடாக விருக்கிறதாம். இதிலே ஒரு ஆசாமியிருக்கிறார்; அவர் காலையில்ஆறுமணிக்கு உட்கார்ந்து மூன்றுவது வீடுவரைகேட்கும்படி "தேவாரம், திருவாசகம், அகவல், கவசம்" முதலியன படித்து ஒன்பது மணி வரை பூசை செய்வார். அப்பால் சாப்பாட்டுச் சங்கதிக்குப்புறப்பட்டால் ஏதாவது "மாமிசம்" இல்லாவிட்டால் சோற்றுப் பருக்கை உள்ளே போகமாட்டாது. கடோசிக் கையிருப்பு "கச்சைக் கருவாடாவது, உப்புக்கண்டமாவது" வேண்டும். இவரை ஒருதரம் சிவனடியார் திருக்கூட்டத்திலே 'சிவநாமாவளி' கூறிக்கொண்டு வரக்கண்டோம். கழுத்திலே உருத்திராக்கத்தாழ்வடம்; நெற்றி நிறையவிபூதி; வாயிலே வெற்றிலை போட்டுப் புகையிலை இரண்டுபக்கமும் அதக்கி புளிச்சுப் புளிச்சென்று எச்சிலைத்துப்பிக்கொண்டு சம்போ......னருள் பாலசிவ... ......சண்முக......வேலா என்றகாட்சி மிக வேடிக்கையாகவிருந்தது. (இடம் விடப்பட்டது. எச்சில் துப்புவதற்காக) இவர் தமக்குக் கீழ் உள்ள வேலைகாரர்கள் கதர் வேஷ்டியை கட்டிக்கொண்டிருந்ததைப் பார்த்து, மிகவும் சீற்றதுடன் தண்டித்து அவரிடம் வேலைக்கு இருக்கும்வரைக் 'கதர்' என்ற சங்கதியே வரக்கூடாதென்று சொல்லிவிட்டார். இந்தப் புண்ணியவானுக்கு கதரைக் காணும்பொழுது கண்ணிலே நெருப்புப் பிடிக்கிறதோ? வயிற்றிலே நெருப்புப்பிடிக்கிறதோ? தெரியவில்லை. எப்படியிருந்தாலும் இப்பொழுது நமது சமூகத்திலேகதர் அதிகச் செல்வாக்கைப் பெற்றிருக்கிறது. கொஞ்சம் பாக்கியுள்ள பெயர்களும் தாமாகவே கதர்கட்டிக்கொள்ளமுன்வந்துவிடுவார்கள். நமது பெண்மணிகளும் பழைய காலத்திலே சுழன்று இன்னும் அடையாளமாகப்போட்டுவைக்கப்பட்டிருக்கிற இராட்டினத்தை எடுத்துச் சுழற்றுவார்களாக. அப்படிச் சுழற்றுவார்களானால், நமது சமூகம்—எப்பொழுதும் உடைக்காகப்பிறரையெதிர்பார்க்க வேண்டிய சங்கதி பிராது. கொண்டுவிலை செய்பவந்திருக்கிற ஒவ்வொருவரும் தத்தம் மனைவிமக்கட்கு ஒவ்வொரு "இராட்டினம்" வாங்கிக்கொடுத்து "நூல்" நூற்குமாறு செய்வார்களாக. இது சரிதானா? சரியில்லையா? என்றுஒவ்வொருவரும் மூக்கிலே விரலை வைத்து யோசிக்கட்டும், யோசனை முடிந்தவுடன் மறுக்க முன்வந்தால், அந்தச் சரக்கைக்கொட்டியளக்கிறேன். இனி நான்கொண்டு வந்த சரக்கைக் கொட்டியளக்கிறேன். கேளுங்கள் "கட்டுதல்" என்ன கட்டுதல்? மனதைக்கட்டுதல்வேண்டும். எப்படி? தீதானகாரியங்களைச் செய்கிறதில்லையென்று கட்டுதல்வேண்டும். மீசையுள்ள ஆண் பிள்ளைச்சிங்கங்கள் என்கூட வெளியினில் வாருங்கள் காணும் என்றார் ஒருசித்தர். அதேபோல் தனவைசிய சமூகத்திலே வந்து உதித்த ஒவ்வொரு ஆண்மகனும் சமூகம் இருக்கிற நிலையை புன்னித் திருத்தமுறச் செய்வதற்கும் பழுதில்லாத எந்தக் காரியத்தையும் செய்வேன் என்று மனதைக் கட்டுதல் செய்து என்னோடு ஒவ்வொருவரும் வெளியே புறப்படுங்கள் என்று உண்மையோடு ஆண்மைகூறி வீரமொழிகளைப் பேசி வெளியே புறப்படல்வேண்டும், இடையூறு என்ன நேர்ந்தாலும் அஞ்சவேண்டுவதில்லை.

மனதை ஒருநிலைப்படுத்தி எம்பெருமானுடைய திருப்பாதங்களைப் பய பக்தியுடன் மனதிலே கட்டுதல் வேண்டும். அப்படிக்கட்டுதல் செய்து சமூக விஷயத்திலே நாட்டஞ் செலுத்த முன்வரும் ஒவ்வொருவரும் எடுத்த காரியத்தை முடிவுபெறச் செய்யவார்களென்பது திண்ணம். பெண்மக்கள் உதவி மிகவும்வேண்டும். ஆதலால் அவர்களும் மனதைப் பெருமைக்குப்பலிகொடுத்து விடாமல், சமூகம் திருந்திநன்மையடையும் பொருட்டு மனதை ஒருநிலையில் கட்டுதல்செய்து, சமூகம் பெருமை தங்கிய சமூகமாய்த் திருத்தமுறச் செய்ய முன்வருவார்களாக. "மலைவிழுங்கி மாரியாயிக்கு கதவு ஒரு அப்பளம்" என்றமாதிரி வீண்பேச்சுப்பேசும் விருதாப் பேர்வழிகளும், வெந்த

## மதிப்புரை.

---

### தமிழ்நாட்டுச் செல்வம்.

இது, ஒரு ஆண்டுவிழாவின் தலைவர் நிகழ்த்திய சொற்பொழிவாகும். இவ்வுரை நல்லுரையாகிய காரணம்பற்றிப் புத்தக உருவில் வெளிவந்திருக்கிறது. காரைக்குடி ஹிந்து மதாபிமான ஸங்கத்தின் ஆறும் ஆண்டு விழாவில் தலைமை வகித்து நடத்திய—தமிழ்மக்கட்கு நவசக்தியை பெழுப்பும் வண்ணம் சென்னையிலிருந்து வெள்ளிதோறும் வெளிவரும் "நவசக்தி" யாசிரியராகிய—ஸ்ரீமான் திரு வி. கல்யாணசுந்தர முதலியாரவர்களது முன்னுரையாகிய பொன்னுரையாகுமிது. இதில், இதன் பெயருக்ிணங்கவே, தமிழ் நாட்டின் செல்வங்கள் பலவும் பிரபல ஆதாரங்களோடு எடுத்தோதப் பெற்றிருக்கின்றன. நாடு, நாட்டின்தொன்மை, நாட்டுமொழி, நாட்டினரசியல், நாகரிகத்துறைகள், சமயம், நாட்டு வேதம், நாட்டினர்செய்யவேண்டிய வேலை என்னும் இவைகளைப் பற்றி வரம்பெறு நூல்களாற் றிறம்படப் பேசியிருக்கின்றார்கள். முடிவில் சங்கங்களைப் பற்றியும், இந்து மதாபிமான ஸங்கத்தின் தற்கால நிலைமையைப்பற்றியும் சில மொழிகள் நிகழ்த்தி யிருக்கின்றார்கள். இதனை யோதியுணர்தலால், தமிழ் நூல்களையும் தமிழ்ப் பெருமக்களையும்பற்றி யறிந்து கொள்ளல் இயலும். இதன் விலை அணு ஒன்று. வேண்டுவோர் "காரைக்குடி ஹிந்து மதாபிமான ஸங்கத்தா"ரிடம் பெறலாம்.

---

தைத் தின்று வாயில்வந்ததைப் பேசும் தான்றோன்றிப் பேர்வழிகளும் உதவி செய்ய வராவிட்டாலும், இசைகேட்டுக்கு வராமல் முக்காட்டைப் போட்டுக்கொண்டு மூலைபிலே யிருப்பார்களாக. எந்த விஷயத்திலும் ஒவ்வொருவரும் மனதைக் "கட்டுதல்" செய்தால் சித்தி யடையலாமென்ற ஒரு சமாசாரத்தை நாஞ்சொல்லவேண்டும்?

---

## விளம்பரம்.

தி. அரு. அ. ராம. கடையைச் சேர்ந்த ராமநாதன் செட்டியார், அண்ணாமலை செட்டியார் இவர்களின் இன்சால்வென்சியின் காரைக்குடிக்கு அடுத்த கோவிலூர் கிராமத்திலிருக்கும் ஷை இன்சால்வெண்டுகளுக்கு சொந்தமான அடியில் கண்ட சொத்துக்களில் இன்சால்வெண்டுகளுக்குள்ள அக்குகளை சென்னை ஹைகோர்ட்டு அபிஷியல் அஸைனி அவர்கள் உத்திரவின்பேரில் மெஸர்ஸ் டெளடன் அண்டு கம்பெனியாரால் ககூஉச— வரு ஜூலைமீ ௩0-உ புதன்கிழமை காலை கூ-மணி முதல் ஷை கோவிலூர் கிராமத்திலேயே ஏலம் போடப்படும்.

காரைக்குடி ரிஜிஸ்டிரேஷன் சப் டிஸ்திரிக்ட் கோவிலூர்கிருமத்தில் தேரடிவீதிக்கு வடக்கு, அரிமளம் ஏ.எஸ்.எஸ்.பாடகசாலைக்குகிழக்கு நாகுளிச் செய்க்கு தெற்கு, சுப்பய்யர் விட்டிற்கு மேற்கு, இதற்குள் பட்ட ௩ரு, ௩சு, ௩எ, ௩அ, ௩கூ, கதவிலக்கம் உள்ளதும் கிழ்மேல் அடி கச0, தென்வடல் அடி க௩ரு உள்ள வீடுகள் தனித்தனி லாட்டுகளாக ஏலம் போடப்படும்.

---

## நோட்டீஸ்.

இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் ரெங்கூன் அதை அடுத்த சாமளா, இந்த இரண்டு ஊர்களிலும் என் புருஷன் லேட் சுப. லெ. லெட்சுமணன் செட்டியாரவர்களால் வைத்து நடத்திவந்த சுப. லெ. விலாசக்கடைக்கு என் புருஷன் இறந்த பிறகு அரியக்குடி வெ. ராம. ராமசாமிசெட்டியாரவர்களுக்கு நான் பவர்கொடுக்கும்படி செய்து மேற்படியார் போயிருந்து என்னுடைய தகவலில்லாமல் இவடம் வந்துவிட்டார். பிறகு கண்டனூர் மு. ராம. ராமசாமி செட்டியாருக்கு நான் மேற்படி கடைகளுக்கு ஏஜண்டாகப் பவர்கொடுத்திருந்ததில் மேற்படியாரும் போயிருந்து என்னுடைய அனுமதியில்லாமல் சுமார் நான்கு மாதத்துக்கு முன் இவடம் வந்துவிட்டார். மேற்படியார்களவர்களுடைய ஏஜன்ஸி காலத்தில் எனக்கு யாதொரு தகவலும் கொடுக்காமலும் தங்களிஷ்டப்படி நடத்திவந்தும் ஏஜன்ஸி கணக்குகள் யாதொன்றும் ஒப்பிவிக்காமலும் ஒத்துக்கொடாமலும் மேர்படியார்கள் மேற்படி கடைகளினுடையவும் மேற்படி எஸ்டேட்டினுடையவும் தொகைகளை ஏராளமாய் வியாபித்துக் கொண்டிருப்பதாகவும் தெரியவருவதால் மேற்படி இரண்டு பேர்களுக்கும் கொடுத்திருந்தபவர்களை நான் கேன்ஸல் செய்துவிட்டேன் ஆகையால் இனியாரும் மேற்படியார்களிடத்தில் மேற்படி கடை சம்பந்தமாகவாவது மேற்படி எஸ்டேட் சம்பந்தமாகவாவது மேற்படி கடை எஸ்டேட் சம்பந்தமான சொத்துக்களை விற்கவாவது வேறு எவ்விதமான நடபடி நடத்தவாவது கூடாது. அந்தப்படி யாராவது மேற்படியார்களிடத்தில் இனிக் கொடுக்கல் வாங்கல் வைத்துக்கொள்ளும் பக்ஷத்தில் மேற்படி சுப. லெ. கடையையாவது மேற்படி எஸ்டேட்டையாவது என்னையாவது எவ்விதத்திலும் கட்டுப்படுத்தமாட்டாது என்கிற விபரத்தை இதன் மூலம் தெரிவித்துக் கொண்டிருக்கிறேன.

ஷை சுப. லெ. லெட்சுமியாச்சிக்காக,
ஆத.ராம.ராமனுதன் அமராவதிபுதூர்.

---

## இலங்கைக் கடிதம்.

(நமது நிருபரிடமிருந்து.)

புறக்கோட்டை சம்மாங்கோட்டுக் கோவிலிலிருந்துசென்ற கச-உ காலை எட்டரை மணிக்கு ரதம் வெள்ளவத்தைக்குப் போயது. செட்டிமார்தெருவிலிருந்து கசு-உ காலை எ-மணிக்கு வெள்ளிரதத்தில் கந்தசாமிக் கடவுள் கையில் வாளேந்தியவிதமாய் வைத்து வெகு விமரிசையாய்ப் புறப்பட்டது. ரதத்திற்கு முன்னால் விதவிதமான வேடிக்கைகளும், கண்டியன் வீணவாத்தியமும், சென்னை பாண்ட் வாத்தியமும், மக்களுக்கு மனோரம்மியத்தை யூட்டிக்கொண்டிருந்தன. ரதத்தில் கோடிப்பிரகாசம்போல் ஜொலித்துக்கொண்டிருக்கும் கந்தசாமிக் கடவுளுக்குப் பிரியமான நறுமலர்களைப் பாதத்தில் அணியணியாய் வகுத்து, பக்தசிகாமணிகள் பக்கத்தில் வீற்றிருந்ததானது, ஏனையோரைப் புக்தி யென்னும் பரவசத்தில் ஆழ்த்திவிட்டது. இத்துணைச் சிறப்புகளுடன் வெளியேறியரதமானது, கோட்டைமணிக்கூண்டுக்கு முன்னால் பகல் பன்னிரண்டு மணிக்குத்தான் வந்துசேர்ந்தது. பத்து நிமிஷத்திற்குள் போகக்கூடிய தூரத்திற்கு இத்தனை மணிநேரம் சென்றதனால், கூட்டத்தின் அளவைக் கணித்துக்கொள்ளும்படி வாசக நேயர்களுக்கே விட்டு விடுகிறேன்.

### வெள்ளிரதம் வெள்ளிக்கிழமை திரும்பியது.

வெள்ளவத்தைக்குப் போன வெள்ளிரதம் ஆங்கு அழகாகக் கட்டப்பட்டிருக்கும் தேவாலயத்தின் முன் நிறுத்தப்பட்டு, கந்தசாமிக்கடவுளுக்கு கர்பூர சாம்பிராணி நைவேத்தியம் செய்து மிகவும் பக்தி வணக்கத்துடன் கோவிலுக்குள் கொண்டுபோனார்கள். ஆங்கு இருந்த இரண்டு நாட்களிலும் எண்ணிக்கையில்லாத ஜனங்கள் சுவாமி தரிசனம்செய்துபோயினர். கஅ-உ சாயங்காலம் வெள்ளிரதம் வெள்ளவத்தையிலிருந்துபுறப்பட்டு அதிகாலையில்செட்டிமார்தெருக்கோவிக்கு வந்துசேர்ந்தது. இடையிடையே மழை பெய்து கொண்டிருந்தமையால், வாண வேடிக்கை விளையாட்டுகள் அதிகம் நடைபெறவில்லை. இத்தகைய பெருநாளை அரும் பெரும் பிரயாசையுடன் மிகவும் சிறப்பாய்க்கொணடுநடாத்தும் நாட்டுக்கோட்டைச்செட்டிமாரான தனவந்தர்களுக்கு திரண்ட செல்வத்தையும், விரிந்த புத்தியையும் கொடுத்து நாட்டுக்கு நலம் புரியத் தேவன் திருவருள் சுரப்பானாக.

### இந்தியாவிலிருந்து வந்தது-எமலோகம் செல்லவர்?

வேல் பெருநாள் விசேஷத்தைக் கண்டுகளித்துப்போக இந்தியாவிலிருந்த நூற்றுக்கணக்கான செட்டிமார்கள் ஈங்கு விஜயஞ் செய்திருந்தனர். அவர்களுள் ஒருவர் தமது பத்துவயதுப் பையனையும் கூட்டிவந்தனர். தகப்பனும் மகனும் சுவாமி தரிசனம் செய்ய வியாழக்கிழமை கஉ-உ வெள்ளவத்தைக்குப் போனார்கள். ஆங்கு கண்ணையும் மனதையும் கவரத்தக்க அநேக வகையான பழங்களும், பலகாரங்களும் விற்பதுண்டு. இக்காலத்தில் "ரமுட்டான்" என்று சொல்லப்பட்ட ஓர் வகைப்பழம் இங்கு ஏராளம். பையனுக்கு பழத்தைப்பார்த்ததும் ஆசை யதிகரித்துவிட்டது. ஆசைமே லீட்டால் ரமுட்டானை வாங்கித் தின்றான். பழத்தின்மேல்கொண்டுள்ள ஆசையால் அதனுள்ளிருக்கும் கொட்டையையும் விழுங்கிவிட்டான். கொட்டை தொண்டையினுள் சிக்கிக்கொண்டது. வேண்டிய பிரயத்தனங்கள் செய்தும் முடியாமலே போய்விட்டது. கொஞ்சநேரத்தில் பையனும் எமலோகம் சென்று விட்டான். வழக்கம்போல் தகனக் கிரியைகள் ஒழுங்காய் செய்விக்கப்பட்டன. மகனை இழந்த தகப்பனின் மனத்துயரை வரையுந் திறனின்று.

---

இதனால் சகல கனதனவான்களுக்கும் தெரியப்படுத்துவது யாதெனில் எங்களிடம் கனத்த இரும்புத் தகட்டினால் செய்து தயாராயிருக்கும் கெட்டி இரும்புப் பெட்டிகள் சரசமாயும் காலக்கிரய விலைப்படிகொடுக்கிறோம். ஷை பெட்டிகள் க000—வருஷத்துக்கு மேல் ஆண்டுவரும் அழியாதபொருள். மிகுந்தபலமுடைய ஆங்கில்கள்வைத்து குப்பை ஆணிகளால் நெருக்கமாய் ரிவிட் செய்யப்பட்டிருக்கிறது. நெருப்பு கன்னங்களவு முதலானதும் கிஞ்சித்தேனும் அணுகமாட்டாது. வர்ணங்கள் விதம் விதமாகயிருக்கும். வேண்டுபவர்கள் அடியில் கண்டவிலாசத்துக்கு எழுதி யனுப்பினல் செய்தனுப்புகிறோம்.

ழ. அ. அண்டு, அ. நா. அ. இராமசாமிச் செட்டியார் & கம்பெனி,
இரும்புப்பெட்டி உற்பத்திச்சாலை நெ 2/70 பிராட்வே மதாரஸ்

இராமநாதபுரம்ஜில்லா கண்டனூர் அ. நா. அ. ராமசாமிசெட்டியார் வீட்டிலும், ரெங்கூன் வயி. ராம. அரு. கடையிலும், ஈப்போ அ. நா. அ. கடையிலும் ஆர்டர் கொடுத்து பெற்றுக்கொள்ளலாம்.



குறைந்தவிலை! நூதனமானது!!! உயர்ந்தவேலை!!!

## ராஜூ'ஸ் தமிழ் அச்சு எழுத்துப் பெட்டி

செட் நே-ச விலை ரூ. சு—கஉ—0.

இந்தத் தமிழ் அச்சு எழுத்துப் பெட்டிகள்ஒவ்வொருவரிடமும் அவசியமா யிருக்கவேண்டியது. ஏனெனில், தங்களுக்குத் தேவையான விலாசங்கள், லேபிள்கள் முதலியவைகளைத் தாங்களே தங்களுக்கு வேண்டிய பெயர்களை அடுக்கிக்கொண்டு கார்டு, கவர், கடிதம் முதலியவைகளில் தமிழில் தாங்களே அச்சிட்டுக்கொள்ளலாம். இந்த எழுத்துக்களை உறுதியான அச்சுபீஸ் வெட்டை ஈயத்தால் தயார் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப்படத்தில் கண்டபடி (க) அ. ராஜுபிள்ளை அண்டு பிரதர். இம்மாதிரி தமிழ்எழுத்துகளும், தமிழ்எண்களும், இங்கிலீஷ் நெம்பர்களும், ஸ்பேஸ்களும் உள்பட ருOO எழுத்துகள் அடங்கிய தகரப் பெட்டி க-ம், (உ) மைபுட்டி க-ம், (௩) பிரஷ் க-ம், (ச) ஷை எழுத்துக்களை இரண்டே முக்கால் அங்குல நீளம் அடுக்கி அச்சிட்டுக் கொள்ளக்கூடியதும் நான்கு வரிகளையுடையதுமான ஸ்குரூகள் அமைத்த டைப்ஹோல்டர் பிடி க-ம், (ரு) எழுத்துக்களை எடுக்கும் சிராவணம் க-ம், (சு) எழுத்துக்களை மட்டமாகத் தட்டும் மரப்பலகை க-ம், (எ) மையைத் தயாராக அமைத்திருக்கும் வயலெட் வெல்ப் இங்கிங்பாட் க-ம், (அ) ஒரு லைன் எழுத்துகளை அடுக்கக்கூடிய கிளிப் ஹோல்டர் க-ம் ஆக மொத்த சாமான்கள் அடங்கிய தமிழ் அச்சு எழுத்துப்பெட்டி நெ-ச. செட் க-க்கு விலை ரூபா சு—கஉ—0. வி. பி. தபால்சார்ஜ் வேறு.

விலாசம்:—அ. இராஜுபிள்ளை அண்டு பிரதர்,
நே. கக, பஜார் ரோட், தூனை, மதராஸ்.

---

## பெங்களூர்.

விலைசரஸம். உத்திரவாதம்.

நல்ல சாயம்.

அசல் பட்டுப்புடவைகள், சித்தாடைகள் பாவாடைகள் எ-முழம் முதல் கஉ-வரை உள்ளது. இதற்கு நீளமானது ஆர்டரின்பேரில்சப்ளை செய்வோம். நாங்களே தறிவேலை செய்கிறவர்கள். எங்கள் சொந்தத்தறியாகச்சேலை சரசம், சாயம் கியாரண்டி. மாதிரிபார்த்து ஆர்டர்களை அட்வான்ஸுடன் எதிர்பார்க்கிறோம். வெளியூர்ச் சில்லறை ஆர்டர்களை வி.பி. செய்வதுடன், பெரிய ஆர்டர்கள் செய்தால் உடனே எங்கள் ஏஜண்டை அனுப்புவோம். மற்றைய ஊர்ச் சரக்குகளைப் பெங்களூர் உருப்படி என்று கொடுப்பதை வாங்கி ஏமாறுதேயுங்கள். விலை உயர்ந்தவை ஆர்டரின்பேரில் தயார் செய்யப்படும்.

குறிப்பு: கலியாணம்முதலிய விசேஷங்களுக்குப் பழங்கள்சப்ளை செய்யப்படும்.

தந்தி அட்ரஸ்:—கண்டாங்கி, பெங்களூர்சிட்டி
(Tel:—"Kandangi" Bangalore City) தங்கள் உண்மையுள்ள
(C. K.) சீ. கே. உச்சப்பா அண்டு பிரதர்ஸ்
சம்பக லெக்ஷ்மிஹால் சிக்பேட்டை பெங்களூர் சிட்டி.

---

### தனவைசிய ஊழியன் சந்தா விபரம்.

| | |
|---|---|
| உள்நாட்டிற்கு வருஷ சந்தா | ரூ. ரு 0 0 |
| வெளி நாட்டிற்கு ஷை சு—0 தனிப்பிரதி க-க்கு | 0 உ 0 |

### விளம்பரம்.

| | |
|---|---|
| மாதம் ஒன்றுக்குப் பத்தி க-க்கு | ரூ. உ0 |
| ஷை பத்தி அரைக்கு | ரூ கக |
| ஷை கால் பத்திக்கு | ரூ சு |
| ஷை அங்குலம் ஒன்றுக்கு | ரூ உ |

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. கஎ-ஆகவும் அரைப்பத்திக்கு ரூ. கூ-ஆகவும், கால்பத்திக்கு ரூ. ரு-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதிற்கதிகமாகவும் விளம்பரம் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி க-க்கு ரூ. கரு-வீதமும் அரைப்பத்திக்கு ரூ. அ-வீதமும், கால் பத்திக்கு ரூ. ச-வீதமும் போடப்படும்.

ஒருபக்கம் விளம்பரம் செய்ய க-மாதத்திற்கு ரூ. ரு0
ஷை ஒரு வாரத்திற்கு ரூ. கரு

"தனவைசிய ஊழியன்" ஆலயம்,
காரைக்குடி

### தபால் தந்திமித்திரன்.

மூன்றும்பதிப்பு அச்சில் தயாராகிக் கொண்டிருக்கிறது. கூடியசீக்கிரம் வெளிவரும்.

முதல்இரண்டாம்பதிப்பைப்பார்க்கிலும் அநேக விஷயங்கள் புதிதாய்ச் சேர்க்கப் பட்டிருக்கிறதுமன்றி ருத்ரோத்காரி வருடம் வரை தவணைவட்டி நடப்பு வட்டிகளும் சேர்க்கப் பட்டிருக்கின் றன. வர்த்தகர்களுக்கு இப்புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. சொற்ப பிரதிகளே தயாராகிக்கொண்டிருக்கிற படியால் வேண்டுவோர் முன்னதாகவே ஆர்டர் அனுப்பி வைக்கும்படி செய்ய வேண்டியது.

இதன் விலை ரூ உ-0-0

வி. பி. சார்ஜ்பிரத்தியேகம்
வைசியநேசன்
தபால் பெட்டிநே ர் உ௫க
இரங்கோன்.

எங்களிடம் நயம்மரியாப்புழுங்கலரிசி பச்சரிசி துவரம்பருப் உழுந்தப்பருப்பு கடலைப் பருப்புகளும் சாதகமானவிலையில் கிடைக்கும்.

---

"ரக்தாட்சி ஆண்டு"

**தனவைசிய ஊழியன் தினசரி.**

விலை ரூ க—0—0

தபாற்கூலி வேறு.

சொற்பப் பிரதிகளே
மீத மிருக்கின்றன

காரியஸ்தர்
தனவைசிய ஊழியன் அச்சுக்கூடம்
காரைக்குடி.

---

தந்திவிலாசம்.
Davanes" (தாவணீஸ்) Bangalore City.

## பெங்களூர் கண்டாங்கி.

பிரசித்தி பெற்ற மேற்கண்ட கண்டாங்கிகளும், சிற்றாடைகளும், பாவாடைகளும், எங்கள் சொந்தத்தறிகளில், திரித்த பட்டிலும், கெட்டிச்சாயத்திலும், தயாரானவை. மற்ற இடங்களில் தயார் செய்து பெங்களூர் கண்டாங்கிகளென்று சொல்லி அநேக வியாபாரிகள் உங்களை மோசம் செய்கிறார்கள். அவரவர்களின் விருப்பத்தின்படி அனுப்பும் ஆர்டர்களுக்கு தாமதமின்றி தயார் செய்து அனுப்புகிறோம்.

எல்லா ஆர்டர்களும், வி. பி. யில் அனுப்பப்படும்.

**பெரிய ஆர்டர்கள் செய்தால் எங்கள் ஏஜண்டை அனுப்புவோம்.**

குறிப்பு:—இந்த கம்பெனியின் சொந்தக்காரரான ஸி. கே. ஹநுமந்தப்பாவின் தம்பி என்று சொல்லிக்கொண்டு பலர் இந்த நாடுகளுக்கு வந்து வேறு சரக்குகளை விற்று ஜனங்களை ஏமாற்றி மோசம் செய்வதாகத் தெரியவருகிறது. அவ்விதம் எங்கள் தம்பி ஒருவரும் இங்கு வரவேயில்லை. அப்படிச் சொல்லுபவர்களிடம் ஏமாந்து போகாமல் இருப்பதுடன் நாங்கள் அவைகளுக்குப் பாத்தியப்பட முடியாதென்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸி. கே. ஹநுமந்தப்பா அண்டு பிரதர்ஸ்,
ஜவுளி வியாபாரிகள், மாருதிஹால்,
சிக்பேட்டை, பெங்களூர் சிட்டி.

---




ஜெயம்! ஜெயம்!!

எங்

" சா. லெ. செ"

சோடா, கோலா, கலர்களே

ஜெயம்.

மீனாக்ஷி சோடா வாட்டர் சம்பெனி,

செஞ்சை காரைக்குடி.

---

சொந்தத்தறி!　　சாயம் உத்திரவாதம்!

## பெங்களூர் பட்டுத் தாவணிகள்.

பிரசித்திபெற்ற பெங்களூர் பட்டு கண்டாங்கிகளும் பாவாடைகளும் புடவைகளும் ஜாகட்சில்க்குகளும் உண்மையான கயர்ப்பட்டினாலும் உயர்ந்த ஜரிகையினாலும் உத்திரவாதமான சாயத்தினாலும் பல ரகங்களிலும் தயார்செய்து வி. பி. மூலமாய் அனுப்புவோம். ஆகையால் நாங்கள் அனைவரும் ஒரு ட்ரையல்ஆர்டர் கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

பெரிய ஆர்டர் கொடுப்போர் கம்பெனிக்குத் தெரிவித்தால் எங்கள் ஏஜண்டை ஸாம்பிளுடன் அனுப்புகிறோம்.

மாகம் சூரய்யாசெட்டி அண்ட் ஸன்ஸ், கோகினூர்ஹால் சிக்பேட்டை,
பெங்களூர் ஸிட்டி.

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி தனவைசியஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியற்றிப்பிரசுரஞ்செய்யப் பெற்றது.

